# ஸ்ரீ ராமகிருஷ்ண மடம் பிரைமரி ஸ்கூல்

பேசின்பிரிட்ஜ் ரோடு, :: சென்னை-600 001.

★ பள்ளிக்கூட கட்டிட நிதிக்கு தாராளமாக நன்கொடை வழங்கக் கோருகிறோம் ★

பள்ளியின் புதிய கட்டிடத்தைக் கட்டிமுடிக்கத் தேவைப்படும் தொகை ரூ. 5 இலட்சமாகும். அதில் ஏற்கனவே இப்போது ரூ. 2 இலட்சம் செலவிடப்பட்டுள்ளது. கடந்த மார்ச் இதழில் ரூ. 250-க்கு மேல் நன்கொடை வழங்கியவர்களின் பட்டியல் விஜயத்தில் இடம் பெற்றது. அந்தப் பட்டியலின் தொடர்ச்சி வருமாறு :

## நன்கொடை வழங்கியவர்களின் பட்டியல்

| | | |
|---|---|---|
| 31. | நாகசுவாமி பவுண்டரி, மதுரை (பள்ளியின் பிரார்த்தனைக் கூடத்தைக்கட்ட, ரூ. 50,000 வழங்க முன்வந்துள்ளார்கள் அதில் ஒரு பகுதியை இப்போது தந்துள்ளார்கள்.) | 25,017—00 |
| 32. | திரு கே. ராமசுவாமி கவுண்டர், பொள்ளாச்சி | 20,000—00 |
| 33. | காலஞ்சென்ற பெற்றோர் டாக்டர். என். என். சுஜூர், திருமதி கல்யாணிபாய் ஆகியோரின் நினைவாக டாக்டர். என். சுஜூர் வழங்கியது. | 5,000—00 |
| 34. | நாதொள்ள சம்பத் செட்டி அண்டு சன் (ஒரு வகுப்பறையைக் கட்ட ரூ. 25,000 வழங்க முன் வந்துள்ளனர். அதில் ஒரு பகுதியை இப்போது தந்துள்ளார்கள்.) | 5,000—00 |
| 35. | டி. எம். அகர்வால் சாரிடீஸ் டிரஸ்ட், சென்னை | 2,000—00 |
| 36. | வெங்கட சாரிடீஸ், சென்னை | 1,000—00 |
| 37. | திரு ஜே. மெமோரியல் டிரஸ்ட், சென்னை | 650—00 |
| 38. | திருமதி சாந்தா கடியார் | 505—00 |
| 39. | மந்தரம் ரங்கைய செட்டீஸ் சாரிடீஸ், சென்னை | 501—00 |
| 40. | மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்ப்பரேஷன், சென்னை | 500—00 |
| 41. | திரு டி. எஸ். சுப்பிரமணியன், சென்னை | 500—00 |

ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தின் இந்தப் பணிகளுக்கு ரூ. 250-ம் அதற்கு மேலும் வழங்கப் பெறும் நன்கொடைகளுக்கு பிரிவு 80-G வருமான வரிச் சட்டத்தின்படி வரி விலக்குச் சலுகை உண்டு.

---

### எழுத்தாளர்களுக்கு

நமது பத்திரிகைக்கு ஏற்புடைய கதை, கட்டுரை, தகவல்கள் (கவிதைகள் அனுப்ப வேண்டாம்) மகான்களின் வாழ் கை நிகழ்ச்சிகள் முதலிய எதையும் தபால் மூலமே அனுப்ப வேண்டும். அவற்றைத் திருத்தி அமைக்கவும் சுருக்கவும் ஆசிரியருக்கு உரிமை உண்டு.

மக்களுக்குப் பயன்படுவதாகவும், சுருக்கமாகவும் கருத்தாழம் கொண்டதாகவும் எழுத் தோவியம் அமைவது முற்றிலும் அவசியம். காகிதத்தின் ஒரு பக்கத்தில் மட்டும், வரிக்கு வரி நிறைய இடம் விட்டு, எளிய தமிழ் நடையில் தெளிவாக எழுதப்பட வேண்டும்.

பத்திரிகையில் வெளியிடப்படுவதாக இருந்தால், அனுப்பியவருக்கு ஒரு வார காலத்திற் குள்ளாக ஆசிரியர் சார்பாகப் பதில் கிடைத்துவிடும். அவ்விதம் பதில் பெறாத அன்பர்கள், போதிய தபால் தலைகளை அனுப்பிவைத்துத் தமது படைப்புக்களைத் திரும்பப் பெற்றுக்கொள்ள வேண்டுகிறோம்.

ஆசிரியர்
ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

| தொகுதி—60 | மே 1980 | இதழ்—5 |
| --- | --- | --- |

## பொருளடக்கம்



# ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை-600 004

## 1980 மே மாத நிகழ்ச்சிகள்

ஸ்ரீ புத்த ஜெயந்தி—பொதுக்கூட்டம்

4—5—80 ஞாயிறு மாலை 5-30 மணிக்கு தலைவர் : சுவாமி கபீரானந்தர்
தலைப்பு : புத்தரின் வாழ்வும் வாக்கும்
பேசுபவர் : பா. ராமன், எம். ஏ.

சத்சங்கம் : ஞாயிறுதோறும் (மாலை 4 மணி முதல் 4-30 மணி வரை)

ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம் (18—6—80)

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம பாராயணம் (11—5—80 & 25—5—80)

4-30 மணி முதல் 5-30 மணி வரை—சொற்பொழிவு (தமிழ்)

11—5—80 1. பாகவதம் - திரு 'அண்ணு' சுப்ரமண்யம்

18—5—80 2. ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமம் - திரு வி. ஆர். கல்யாணசுந்தர சாஸ்திரிகள்

25—5—80 3. ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் - திரு வி. எஸ். வி. குருசாமி சாஸ்திரிகள்

மாலை 5-35 மணி முதல் 6-30 மணி வரை சுவாமி கபீரானந்தர் அவர்கள் ஸ்ரீமத் பகவத் கீதை என்ற தலைப்பில் மே 11, 18, 25 ஆகிய தேதிகளில் ஆங்கிலத்தில் சொற்பொழிவு நிகழ்த்துவார்கள்.

வார நாட்களில் நடைபெறும் சொற்பொழிவுகள் (மாலை 5-45 மணிக்கு)

1. திங்கள் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உபதேசங்கள் — சுவாமி அமிர்தானந்தர்
2. செவ்வாய் பக்தியோகம் — சுவாமி கபீரானந்தர்
3. புதன் முண்டக உபநிஷதம் — சுவாமி அமலாத்மானந்தர்
4. வியாழன் விவேக சூடாமணி — திரு 'அண்ணு' சுப்ரமண்யம்
5. வெள்ளி ஆன்மிக வாழ்க்கை — சுவாமி கமலாத்மானந்தர்
6. சனிக்கிழமை (3—5—80 மட்டும்) அத்யாத்ம ராமாயணம் — ஜஸ்டிஸ் டி. ராமகிருஷ்ணன், ஐ. சி. எஸ். (ரிடையர்டு)
7. சனிக்கிழமை (10—5—80 மட்டும்) ஸ்ரீ ஆஞ்சநேயர் — ஆர். கோதண்டராமன்
8. சனிக்கிழமை (17, 24—5—80 மட்டும்) வால்மீகி ராமாயணம்-டாக்டர் என். வீழிநாதன்

வேறு சில நிகழ்ச்சிகள் :

13—5—80 ஸ்ரீ ஸ்ரீ பலஹாரிணி காளி பூஜை (மாலை வழிபாட்டிற்குப் பிறகு)

11—5—80 & 25—5—80 ஆகிய ஏகாதசி தினங்களில் மாலை வழிபாட்டிற்குப் பிறகு ஸ்ரீ ராம நாம சங்கீர்த்தனம் நடைபெறும்.

4—5—80 மாலை 5-30 மணிக்கு ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உபதேசங்கள் என்ற தலைப்பில் சுவாமி கீர்த்திதானந்தர் அவர்கள் உரை நிகழ்த்துவார்கள். இடம்: 7, கெல்லீஸ் ரோடு, கீழ்ப்பாக்கம்.

9, 16, 23, 30 ஆகிய தேதிகளில் மாலை 6-15 மணிக்கு சுவாமி ராகவேசானந்தர் அவர்கள் ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணமும், பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் என்ற தலைப்பில் சொற்பொழிவும் நிகழ்த்துவார்கள் இடம்: 18, 9-ஆவது லேன், சாஸ்திரிநகர்.

அனைவரையும் அனைத்து நிகழ்ச்சிகளிலும்கலந்துகொள்ளுமாறு அன்புடன் அழைக்கிறோம்.

தொலைபேசி : 71231

தலைவர்
ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004.

ஆசிரியர் : சுவாமி தன்மையானந்தர். துணை ஆசிரியர் : சுவாமி கமலாத்மானந்தர்
பதிப்பாளர் : ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை-600 004
அச்சிடுவர் : R. கிருஷ்ணஸ்வாமி, ஸ்ரீமதி பிரிண்டர்ஸ், 3/30 மவுண்ட் ரோடு, சென்னை-600002



# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை

—திருமூலர்

| தொகுதி 60 | ரௌத்திரி ஞுவைகாசி மீ | இதழ் 5 |
| --- | --- | --- |




नानाकारैः शक्तिकदम्बैर्भुवनानि
व्याप्य स्वैरं क्रीडति येयं स्वयमेका।
कल्याणीं तां कल्पलतामानतिभाजां
गौरीमम्बामम्बुरुहाक्षीमहमीडे ॥

நாநாகாரை: சக்திகதம்பைர் புவநாநி
வ்யாப்ய ஸ்வைரம் க்ரீடதி யேயம் ஸ்வயமேகா।
கல்யாணீம் தாம் கல்பலதாமாநதிபாஜாம்
கௌரீமம்பா மம்புருஹாக்ஷீமஹ மீடே ।।

—கௌரீ தசகம்

தான் ஒருத்தியாக இருந்தும் பலவித வடிவமுள்ள சக்திக் கூட்டங்களின் உருவம் எடுத்துக் கொண்டு உலகங்கள் எல்லாவற்றிலும் பரவித் தன் இஷ்டப்படி விளையாடுபவளும், மங்களத்தைக் கொடுப்பவளும், வணங்குபவர்களுக்குக் கற்பகக்கொடியைப் போல அபீஷ்டத்தைத் தருபவளும், தாமரை போன்ற கண்களுள்ளவளுமான தாயான கௌரியை நான் துதிக்கிறேன்.

போக மாட்டேன் பிறரிடத்தே
பொய்யிற் கிடந்து புலர்ந்து மனம்
வேக மாட்டேன் பிறி தொன்றும்
விரும்ப மாட்டேன் பொய்யுலகன்
ஆக மாட்டேன் அரசே என்
அப்பா என்றன் ஐயா நான்
சாக மாட்டேன் உனைப்பிரிந்தால்
தரிக்க மாட்டேன் கண்டாயே.

—வடலூர் வள்ளலார்



# ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருள் வாக்கு

**ஞாயிறு, மார்ச் 1, 1885**

ஸ்ரீராமகிருஷ்ணர் (நரேந்திரரிடம்): நலமாக இருக்கிருயா? நீ அடிக்கடி கிரீஷ்கோஷின் வீட்டுக்குச் சென்று அவரைச் சந்திப்பதாகக் கேள்விப்பட்டேன். அது உண்மை தானு?

நரேந்திரர்: ஆம், ஐயனே. அவ்வப்போது நான் அவர் வீட்டுக்குச் செல்கிறேன்.

கடந்த சில மாதங்களாக, கிரீஷ் குருதேவரிடம் வந்து போக ஆரம்பித்திருந்தார். 'கிரீஷுக்கு இருக்கும் கடவுள் நம்பிக்கை எவ்வளவு ஆழமானது என்பதை எவராலும் அளந்தறிய முடியாது' என்று ஸ்ரீராமகிருஷ்ணர் சொல்வது வழக்கம். கிரீஷுக்குக் கடவுள் நம்பிக்கை எவ்வளவு ஆழமாக இருந்ததோ, அதைப்போலவே கடவுளை அடைய வேண்டும் என்ற அருள்தாகமும் அவருக்குத் தீவிரமாக இருந்தது. வீட்டில் அவர் எப்போதும் குருதேவரைப் பற்றியே ஆழ்ந்து சிந்தித்துக் கொண்டு ஒரு பித்தனைப் போல இருந்து வந்தார். நரேந்திரர் அடிக்கடி கிரீஷின் வீட்டிற்குச் செல்வதுண்டு. ஹரிபாதர், தேவேந்திரர் மற்றும் ஸ்ரீராமகிருஷ்ணரின் பல பக்தர்களும் கிரீஷின் வீட்டுக்கு அடிக்கடி செல்வது வழக்கம். அவர்களுடன் கிரீஷ் எப்போதும் ஸ்ரீகுருதேவரைப் பற்றி மட்டுமே பேசி வந்தார். ஆனால் கிரீஷ் பலவிதமான லௌகிக அனுபவங்களைப் பெற்றவராகவும், இல்லற வாழ்க்கையில் இருப்பவராகவும் இருந்தார். நரேந்திரரின் விஷயமோ முற்றும் வேருனது. 'நரேந்திரர் இல்லற வாழ்க்கையை மேற்கொள்ளமாட்டார்; அவர் அகத்திலும் புறத்திலும் பெண், பொன் ஆசைகளை முழு அளவில் துறந்தவராக வாழப்போகிருர்' என்பதை, குருதேவர் நன்கு அறிந்திருந்தார்.

குருதேவர் நரேந்திரரிடம் பேச ஆரம்பித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: நீ கிரீஷைப் பார்ப்பதற்கு அடிக்கடி போகிருயா? வெள்ளைப்பூண்டு வைத்திருந்த பாத்திரத்தை எவ்வளவுதான் கழுவினுலும் அந்தப் பாத்திரத்தில் வெள்ளைப் பூண்டின் வாசனை சிறிதளவாகிலும் இருக்கத்தான் செய்யும்.❖ இங்கு வரும் இளைஞர்கள் பரிசுத்தமான உள்ளம் படைத்தவர்கள்; அவர்கள் பெண், பொன் ஆசைகளால் தீண்டப் பெருதவர்கள். நீண்ட காலம் பெண், பொன் ஆசைகளுக்கு உட்பட்டு வாழ்ந்தவர்களிடம் வெள்ளைப்பூண்டின் வாசனையைப் போல, பெண், பொன் ஆசைகளால் ஏற்படும் வாசனை இருக்கவே செய்யும்.

ஆம், அவர்கள் காகங்கள் கொத்திய மாம் பழத்தைப் போன்றவர்கள். அவ்விதம் காகங்களால் கொத்தப்பட்ட மாம்பழத்தை இறைவனுக்கு நிவேதனமாகப் படைக்க இயலாது; மக்களும் அப்படிப்பட்ட பழத்தை உட்கொள்ளத் தயங்குவார்கள்.

---

❖ 'பெருங்காய டப்பாவின் வாசனை' என்று தமிழ் நாட்டில் வழங்கும் கருத்து இங்கே குருதேவரின் வாக்கில் காணகிறது.

புத்தம்புதிதாக ஒரு மட்பாண்டமும், ஏற்கனவே தயிர் வைப்பதற்கு வழக்கமாகப் பயன்படுத்திய மற்ளெரு பழைய மட்பாண்டமும் இருப்பதாக வைத்துக்கொள். அப்படிப்பட்ட மட்பாண்டத்தில் பாலே வைத்தால் அது கெட்டுவிடுமோ என்று மக்கள் பயப்படுவார்கள். அநேகமாக அப்படிப்பட்ட பாத்திரத்தில் வைக்கப்படும் பால் கெட்டுத்தான் போகிறது.

கிரீஷைப் போன்று இல்லற வாழ்க்கையில் இருப்பவர்கள் ஒரு தனி வகுப்பைச் சேர்ந்தவர்கள். அவர்கள் யோகத்தையும் விரும்புவார்கள் ; போகத்தையும் விரும்புவார்கள். அவர்களின் மனநிலே இராவணனுடைய மனநிலேயைப் போன்றது. இராவணன் நாககன்னிகளேயும் தேவ கன்னிகளேயும் அடைய விரும்பினன் ; அதே சமயத்தில் அவன் இராமபிரானே அடையவும் ஆசைப்பட்டான். அவனேப் போன்ற லௌகிக மக்கள் அசுரர்களேப் போன்றவர்கள். அசுரர்கள் பலவித லௌகிக இன்பங்களேயெல்லாம் அனுபவித்துக்கொண்டே, அதே சமயத்தில் பகவான் நாராயணனேயும் அடைய விரும்பினர்.

நரேந்திரர் : ஆனுல் கிரீஷ் தமது பழைய நண்பர்களின் தொடர்பை எல்லாம் விட்டுவிட்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : ஆமாம், ஆமாம். கிரீஷ் முதிர்ந்த வயதில் காயடிக்கப்பட்ட காளேமாடு போன்றவர். ஒரு சமயம் நான் பர்துவான் என்ற இடத்திற்குச் சென்றிருந்தபோது அங்கு ஒரு காளேமாடு பசுக்கள் அடங்கிய கூட்டத்தில் இருந்ததைப் பார்த்தேன். அந்தக் காளேமாடு ஒரு பசுவிடம் போயிற்று! அதைப் பார்த்ததும் நான் ஆச்சரியத்துடன், ''இது என்ன? இது காயடிக்கப்பட்ட காளேமாடு ஆயிற்றே!'' என்று வண்டியோட்டியிடம் கேட்டேன். அதற்கு வண்டியோட்டி, ''ஐயா, தாங்கள் ஆச்சரியப்படுவது சரிதான். இந்தக் காளேமாட்டிற்கு வயது வந்தபிறகு காயடித்திருக்கிருர்கள். அதனுல்தான் பழைய வாசனே இதை விட்டு முற்றும் நீங்காமல் இருக்கிறது'' என்று பதில் கூறினன்.

ஓர் இடத்தில் சில சன்னியாசிகள் அமர்ந்திருந்தார்கள். அவர்கள் இருந்த வழியாக ஓர் இளம்பெண் தற்செயலாகச் செல்ல நேர்ந்தது. எல்லாத் துறவிகளும் முன்பு போலவே கடவுள் தியானத்தில் ஆழ்ந்திருந்தார்கள். ஆனுல் அவர்களுள் ஒரே ஒருவன் மட்டும் நடந்து சென்றுகொண்டிருந்த பெண்ணே ஓரக்கண்ணுல் பார்த்தான். அதற்குக் காரணம், அவன் குடும்ப வாழ்க்கையில் இருந்து மூன்று குழந்தைகளேப் பெற்றபின் துறவி ஆகியிருந்தான்.

ஒரு கோப்பையில் வெள்ளேப்பூண்டின் சாற்றை வைத்திருந்தால், அந்தக் கோப்பையிலிருந்து பூண்டுவாசனே அவ்வளவு சுலபத்தில் போய்விடுமா என்ன? பயன்படாத எட்டிமரத்தில் மாங்கனிகள் பழுக்க முடியுமா? ஒரு யோகிக்கு வேண்டுமானுல் தனது சித்தியைக் கொண்டு எட்டிமரத்திலும் மாங்கனிகளே உண்டுபண்ணுவது சாத்தியமாகும். ஆனுல் உலகில் உள்ள எல்லா மக்களுக்குமே இது போன்ற சித்தி இருக்கிறதா என்ன?

லௌகிக வாழ்க்கையில் சிக்கிக்கொண்டிருப்பவர்களுக்குக் கடவுளேப்பற்றி நினேப்பதற்கு எங்கே நேரம் இருக்கிறது? ஒருவன் தனக்குப் பாகவதத்தை விளக்கிச் சொல்வதற்கு ஒரு பாகவதப் பண்டிதர் தேவை என்று தேடிக்கொண்டிருந்தான். அவனுடைய நண்பன், ''எனக்கு மிகச் சிறந்த ஒரு பாகவதப் பண்டிதரைத் தெரியும். ஆனுல் அவர் கிடைப்பதற்கு ஓர் இடைஞ்சல் இருக்கிறது. அதாவது அவர் தாமே உழவு வேலேகளேயெல்லாம் கவனிக்க வேண்டியிருக்கிறது. அவரிடம் நான்கு கலப்பைகளும் எட்டுக் காளேமாடுகளும் இருக்கின்றன. எப்போதும் அவர் வேலேகளில் ஈடுபட வேண்டிய நிலேயில் இருக்கிருர். ஆகவே அந்தப் பாகவதப் பண்டிதருக்கு ஓய்வாக நேரம் கிடைப்பதே இல்லே'' என்று தெரிவித்தான்.

அதைக் கேட்டதும் பண்டிதர் தேவை என்று தேடிக்கொண்டிருந்தவன், ''நேரம் கிடைக்காத அப்படிப்பட்ட ஒரு பண்டிதர்

எனக்குத் தேவையில்லை. கலப்பை, காளைமாடு என்று இவற்றில் கட்டுண்டிருக்கும் பாகவதப் பண்டிதரை நான் தேடவில்லை. எனக்கு உண்மையிலேயே பாகவதத்தை விளக்கிச் சொல்லக்கூடிய பண்டிதர்தான் தேவை'' என்று பதில் சொன்னான்.

ஓர் அரசன் தனக்கு நாள்தோறும் பாகவதத்தை விளக்கிச் சொல்ல ஒரு பண்டிதரை நியமித்திருந்தான். ஒவ்வொரு நாளும் பண்டிதர் பாகவதம் படித்து முடித்ததும், ''அரசே! இன்று நாம் பார்த்த பாகவதப் பகுதியின் கருத்தைத் தாங்கள் புரிந்துகொண்டீர்களா?'' என்று அரசனைக் கேட்பது வழக்கம். அதற்குப் பதிலாக அரசன் ஒவ்வொரு நாளும், ''சுவாமி, முதலில் பாகவதத்தை நீங்கள் புரிந்துகொள்ளுங்கள்'' என்று சொல்லி வந்தான். வீட்டுக்குத் திரும்பியதும் பண்டிதர், ''ஏன் அரசர் ஒவ்வொரு நாளும் நீங்கள் பாகவதத்தை முதலில் புரிந்துகொள்ளுங்கள் என்று சொல்கிறார்?'' என்று தமக்குத் தாமே நினைத்துக்கொள்வார்.

அந்தப் பண்டிதர் நாள்தோறும் பிரார்த்தனையிலும் ஜபத்திலும் ஈடுபடும் நல்ல ஆத்மசாதகராக இருந்தார். நாளடைவில் அவருக்கு உள்ளுணர்வு தோன்றியது. அது காரணமாக, இந் உலகில் இறைவனின் பாதகமலங்கள் மட்டும்தான் உண்மையானவை, சாரமானவை ஆகும்; மற்றவைகள் எல்லாமே பொய், சாரமற்றவை, மித்யை-என்பதை அந்தப் பண்டிதர் மிகவும் தெளிவாக உணர்ந்துகொண்டார். ஆகவே அவருக்கு உலக வாழ்க்கையில் வைராக்கியம் ஏற்பட்டு, வீட்டைத் துறந்து சன்னியாசியாகக் கிளம்பினார். அவ்விதம் அவர் சன்னியாசியாகப் புறப்பட்டுச் சென்றுகொண்டிருந்தபோது ஓர் ஆள் மூலம், ''அரசே! இப்போது நான் பாகவதத்தைப் புரிந்துகொண்டேன்'' என்ற செய்தியை அரசனுக்குச் சொல்லி அனுப்பினார்.

அப்படியானால் உலக மக்களை நான் வெறுக்கிறேன் என்பது அர்த்தமா? இல்லவே இல்லை. உலக மக்களை நான் பார்க்கும்போது 'எல்லாம் பிரம்மம்' என்ற பிரம்மஞானத்தை மனதில் கொண்டு பார்க்கிறேன். பரவஸ்துவாகிய அந்தப் பிரம்மம் ஒன்றே எல்லாமாக இருக்கிறது; அந்த நாராயணனே எல்லா மக்களாகவும் இருக்கிறார். எல்லாப் பெண்களும் ஜகன்மாதாவின் வடிவங்களாகவே திகழ்வதை நான் பார்க்கிறேன். ஆகவே இந்த நிலையில் பதிவிரதை ஒருத்திக்கும் விலைமகள் ஒருத்திக்குமிடையே எந்தவித வித்தியாசத்தையும் நான் பார்க்கவில்லை. ★

---

கிணற்று ஜலத்துக்குள் நீர் நிரம்பிய குடத்தை இழுக்கும்போது கனம் தெரிவதில்லை. ஆனால், தண்ணீர் மட்டத்திற்கு மேலே குடம் வந்தவுடன் கனக்க ஆரம்பித்துவிடுகிறது. எளிதில் புரட்ட முடியாத பெரிய மரங்களை வெள்ளத்துக்கு அடியில்தான் புரட்டி இழுப்பது வழக்கம். அதேமாதிரி, நம் துக்கங்களையெல்லாம் ஞானமாகிற தண்ணீரில் அமுக்கிவிட வேண்டும். அப்போதும் துக்கத்துக்குக் காரணமான விஷயங்கள் இருக்கத்தான் செய்யும். ஆனால் ஜலத்துக்குள் பளுவை இழக்கும் குடம் மாதிரி அப்போது துக்கம் மிகவும் இலேசாகிவிடும்.

—காஞ்சிப் பெரியவர்

சர்வாங்காசனம் செய்தால்: குஷ்டம், மேக வியாதி, காக்காய்வலிப்பு, மலேரியா, வெட்டை நோய், காசம், நீரிழிவு, மூலம், மலச் சிக்கல், அஜீரணம் முதலியன நீங்கும். மாதக் கோளாறுகள், வலிப்புக்கள் வாரா. இரவில் விந்து வெளியேறுவதையும், பிற இனப்பெருக்க உறுப்புக்களின் நோய்களையும் அகற்றும். இருதயம் பலமடையும். இளமை உண்டாகும், உடல் வளரும், மனம் விரியும்.

— ஓர் அனுபவம்

வேதப் பொருளை விளக்கவே ஸ்ரீமத் ராமாயணம் வந்தது.

—பகவான் வால்மீகி




## புத்தர் ஆற்றிய உழவுத் தொழில்

இராஜகிருகத்திற்கு அருகே ஏகானலம் என்று ஒரு கிராமம் இருந்தது. அந்தக் கிராமத்தில் பாரத்துவாஜன் என்ற ஒரு பிராம்மணன் வசித்து வந்தான். அவன் பெரிய பணக்காரன். ஏராளமான நிலபுலன்கள் அவனுக்குச் சொந்த மாக இருந்தன.

பாரத்துவாஜனிடம் ஆயிரம் எருதுகளும் அவற்றைக் கலப்பையில் பூட்டி உழுவதற்கு ஐந்நூறு உழவர்களும் வேலே செய்து வந்தார்கள்.

ஒரு சமயம் வயலில் அறுவடை முடிந்த பின்பு, அறுவடையை 'முன்னிட்டுப் பெரிய அளவில் ஒரு விருந்துக்குப் பாரத்துவாஜன் ஏற்பாடு செய்திருந்தான். அந்த விருந்தில் நூற்றுக்கணக்கான மக்கள் கலந்து கொண் டார்கள். விருந்திற்கு வந்தவர்களுக்கெல்லாம் விதம் விதமான உணவு வகைகள் பரிமாறப் பட்டன.

அந்தச் சமயத்தில் பகவான் புத்தர் ஏகானல கிராமத்திலே இருந்த ஒரு விகாரத்தில் தங்கி யிருந்தார். அவர் பாரத்துவாஜனுக்குப் பௌத்த தர்மத்தைப் புகட்ட மனம் கொண்டார். எனவே புத்தபிரான் பாரத்துவாஜன் விமரிசை யாக விருந்து நடத்திக்கொண்டிருந்த இடத் திற்குச் சென்ருர். அங்கு அவர் கையில் திரு வோட்டுடன் பாரத்துவாஜன் இருந்த இடத்தி லிருந்து சற்றுத் தூரத்தில் அமைதியாக நின்று கொண்டிருந்தார். பாரத்துவாஜன் பகவான் புத்தர் அங்கு நிற்பதைப் பார்த்தும் பாராதவன் போலப் பாராமுகமாக இருந்தான். இதற்குள் விருந்து சாப்பிட்ட விருந்தினர்களில் சிலர் புத்த ரின் முகப்பொலிவால் கவரப்பட்டு அவரிடம் சென்று வணங்கி அவரைச் சூழ்ந்து கொண்டார் கள்.

இதை விரும்பாத பாரத்துவாஜன் கோபத் துடன் புத்தரைப் பார்த்து, ''ஓ பிக்குவே, நீங்கள் ஏன் பிச்சைக் கேட்டு வந்து இங்கே நிற்கிறீர்கள்? இப்படி இரந்து வாழ்வதைவிட நீங்கள் ஏன் உழைத்து வாழக்கூடாது? நான் நிலத்தை உழுது, விதை விதைத்து, அறுவடை செய்வதனுல் உண்பதற்கு எனக்குத் தானியம் கிடைக்கிறது. பிக்குவாகிய நீங்களும் என்னேப் போல உழவுத்தொழிலே மேற்கொண்டு உழைத் தால், உங்களுக்கும் சாப்பிடுவதற்கு ஏதாவது உணவு கிடைக்கும்'' என்று கூறினுன்.

பாரத்துவாஜன் இவ்விதம் சொன்னதும் ததாகதராகிய புத்தபிரான், ''பிராம்மணரே, நானும்கூடத் தங்களேப் போலவே ஒரு நிலத்தை உழுது, விதை விதைத்து, அறுவடை செய்த பிறகுதான் சாப்பிடுகிறேன்'' என்று அமைதியாகப் பதில் கூறினுர்.

புத்தரின் பதில் பாரத்துவாஜனுக்குப் பெரிதும் வியப்பை உண்டுபண்ணியது. அவன் ஏளனத் துடன் புத்தரை நோக்கி, ''ஓ பிக்குவே! உழவுத் தொழிலில் ஈடுபடுவதாக உங்களே நீங்கள் சொல்லிக்கொள்வது எப்படிப் பொருந் தும்? நீங்கள் உழுவதை ஒருவருமே பார்த்தது கிடையாதே! நீங்கள் உழுவதாகச் சொல்லும்

நிலம் எங்கே இருக்கிறது? நீங்கள் என்ன விதையை விதைக்கிறீர்கள்? நீங்கள் உழுவ தற்குப் பயன்படுத்தும் கலப்பைகளும் காளை மாடுகளும் உங்களிடம் எங்கே இருக்கின்றன? உழுவதாகச் சொல்லும் நீங்கள், உழவுக் கருவி களுக்குப் பதிலாகக் கையில் பிக்ஷா பாத்திரத்தை அல்லவா வைத்துக்கொண்டு நிற்கிறீர்கள்?'' என்று கேட்டான்.

பாரத்துவாஜனின் உள்ளத்தில் ஞான ஒளி யின் உதயகாலம் நெருங்கிவிட்டதைப் புரிந்து கொண்ட புத்தர், அவனுக்குப் பின்வரும் பதிலைக் கூறினர்: ''தர்மம் என்ற நிலத்தில் நான் உழுகிறேன். அதில் நல்ல நம்பிக்கை என்ற விதைகளை விதைக்கிறேன். அந்த விதை களுக்கு நற்செயல்கள் என்ற மழைநீரைப் பாய்ச்சுகிறேன். ஞானம், பணிவு ஆகிய இரண்டும் என் கலப்பை ஆகும். என் மனதை நல்வழி காட்டும் கடிவாளமாக நான் இழுத்துப் பிடித்திருக்கிறேன். வழுவாத நியமம் என்ற கைப்பிடியை நான் பலமாகப் பிடித்துக் கொண் டிருக்கிறேன். கருத்துடைமை என்பதைத் தார்க்கோலாக வைத்திருக்கிறேன். விடா முயற்சி என்ற காளை மாடுகள் எனது ஏரை இழுத்துச் செல்கின்றன. வாழ்க்கையில் தோன்றக்கூடிய பொய்க்காட்சி, ஆசை ஆகிய கொடிய களைகளை அகற்றும் பொருட்டு நான் நன்ருக ஆழ உழுகிறேன். முடிவில் நிர்வாணம் என்ற நித்தியக்கனியை (அழியாத அமுதத்தை) நான் அறுவடை செய்கிறேன். இந்த அறு வடையைச் செய்பவர்கள் எவராயினும் அவர் கள் எல்லாத் துன்பங்களிலிருந்தும் விடுபடுவார் கள். அவர்களுக்கு ஒருநாளும் எந்தக் குறைவும் ஏற்படாது.''

போதிமாதவரின் உரைகள் பாரத்துவாஜ னின் உள்ளத்தை ஆட்கொண்டன. அவன் புத்தரின் கூற்றில் பொதிந்திருந்த உட்கருத்தை உணர்ந்துகொண்டான். புத்தர் தமது உழவைப்பற்றிச் சொல்லி முடித்ததும் பாரத்து வாஜன் அவரது திருவடிகளில் மனப்பூர்வமாக விழ்ந்து வணங்கினன்.

பிறகு பாரத்துவாஜன் புத்தரிடம், ''போதி மாதவரே! தங்களின் அறிவுரை நிறைந்த கருத்தாழத்துடன் அருமையாகத் திகழ்கிறது. தவறி விழுந்துவிட்ட ஒரு பொருளைத் திரும்பவும் ஒருவர் எடுத்துத் தருவதைப் போலவும், கண் ணுள்ள ஒருவன் இருளில் தடுமாறிக் கொண் டிருக்கும்போது அவனுக்கு ஒளிவிளக்கைக் கொண்டு மற்ருெருவன் வழி காட்டுவதைப் போலவும், வழி தெரியாமல் அலைந்து சோர்ந்து போனவனுக்குச் சரியான வழியைக் காட்டிக் கொடுக்கும் வழிகாட்டி போலவும், மறைவாக வைக்கப்பட்டதைக் கண்முன்னுல் எடுத்துக் காட்டி உதவி செய்பவனைப் போலவும் தங்கள் உபதேசங்கள் இருக்கின்றன. நான் தங்கள் சீடனுகிவிட்டேன். இப்போதே புத்தரிடமும் புத்த தர்மத்திடமும் பௌத்த சங்கத்திடமும் சரண் புகுகிறேன். குருவாகிய தாங்கள் என்னை ஏற்று அருள் புரியுங்கள்'' என்று நாத் தழு தழுக்க உருக்கத்துடன் வேண்டினன்.

தமது விவசாயத்தில் நிர்வாணம் என்ற அமரத்துவம் வாய்ந்த இனிய கனியை உண்டு பண்ணும் உலககுருவாகிய போதிமாதவருக்குத் தங்கத் தட்டில் பால் சாதத்தைக் கொண்டு வந்து கொடுத்து ஏற்றுக்கொள்ளும்படி பாரத்து வாஜன் வேண்டினன். ஆனல் அவன் தந்ததைப் புத்ததேவர் ஏற்றுக்கொள்ளவில்லை. அதற்குக் காரணம், ஒப்பற்ற பௌத்த தர்மத்தை வழங்கிய பிறகு காணிக்கையாகத் தாம் எதையும் பெற்றுக்கொள்வது பொருந் தாது என்று அவர் கருதினர். அவ்விதமின்றி காணிக்கையைப் பெற்றுக் கொண்டால் அது, பாடகன், நாட்டியக்காரி ஆகியோர் பாடலும் நாட்டியமும் முடிந்த பின்பு தங்கள் பணிக்காகப் பணம் வசூலிப்பது போன்று பௌத்த தர்மமும் ஆகிவிடும் என்று புத்தபிரான் நினைத்தார்.

அன்று முதற்கொண்டு பாரத்துவாஜன் பௌத்த தர்மத்தை மேற்கொண்டான். புத்தரை அவரது இருப்பிடமாகிய விகாரத்தில் சென்று சந்தித்து, பௌத்த சங்கத்தில் சேர்ந்து துறவியானுன். பிற்காலத்தில் அவன் உயர்ந்த நிலை அடைந்த பிக்குவாக விளங்கினன்.



# ஹம்ஸ உபநிஷதம்

'அன்னு' சுப்ரமண்யம்

> ஹம்ஸோபநிஷதத்தின் கருத்துக்கள் முழுவதும் ஆங்காங்கே சில விளக்கங்களுடன் இங்கே தரப்பெறுகின்றன.

முக்திகோபநிஷதம் கூறும் வரிசையில் ஹம்ஸோபநிஷதம் பதினைந்தாவது உபநிஷதமாகும். இது சுக்ல யஜுர் வேதத்தைச் சேர்ந்தது. ஹம்ஸ மந்திரத் தியானமும் யோக முறையும் இங்கே கூறப்படுவதனுல் இந்த உபநிஷதம் ஹம்ஸோபநிஷத்து எனப் பெயருடையதாயிற்று. இது சனத்குமாரரால் கௌதமருக்கு உபதேசிக்கப்பெற்றது.

x x x x

ஓம். அது பூர்ணம். இதுவும் பூர்ணம். பூர்ணத்திலிருந்து பூர்ணம் உதயமாகியுள்ளது. பூர்ணத்திலிருந்து பூர்ணத்தை எடுத்ததும் பூர்ணமே எஞ்சி நிற்கிறது.

கௌதமர் கூறியது: எல்லாத் தர்மங்களையும் உணர்ந்தவரே! எல்லாச் சாஸ்திரங்களிலும் நிபுணரே! எந்த உபாயத்தால் பிரம்ம வித்யையின் தெளிவான ஞானம் ஏற்படுமோ அதை உபதேசியுங்கள்.

சனத்குமாரர் கூறியது: எல்லாத் தர்மங்களையும் ஆராய்ந்து, பினகபாணியான பரமசிவனுடைய உள்ளக் கருத்தை உணர்ந்து பார்வதியால் எந்தத் தத்துவம் உபதேசிக்கப் பெற்றதோ அதை என்னிடமிருந்து கேட்பாயாக.

இது இரகசியமானது; யோகிகளிடம் பொக்கிஷம் போல் வைக்கப்பட்டது; ஹம்ஸத்தின் சொருபத்தை விளங்க வைப்பது; புக்தியையும் முக்தியையும் பயனுக அளிப்பது; தகுதியுடையவர்களுக்கன்றி வெளிப்படையாகப் பேசுவதற்கரியது.

பிரம்மசாரியாகவும், புலனடக்கம் உடையவனுகவும், குருபக்தி உடையவனுகவும் உள்ளவனுக்கு 'ஹம்ஸ ஹம்ஸ' என்ற மந்திரத் தியானத்தை எவ்விதம் செய்ய வேண்டும் என்பதையும் ஹம்ஸ பரமஹம்ஸ நிர்ணயத்தையும் இனி வியாக்கியானம் செய்வோம்.

விறகில் தீப்போலவும், எள்ளில் எண்ணெய் போலவும், எல்லா உடல்களிலும் எங்கும் நிறைந்ததாக உள்ளது எதுவோ அதை அறிந்து ஒருவன் சாவை அடையமாட்டான்.

(சாதகன் ஸித்தாஸனத்தில் இருந்துகொண்டு இடது காலின் மணிக்கட்டால்) ஆஸனத்வாரத்தை அழுத்திக்கொண்டு மூலாதாரத்திலிருந்து வாயுவைக் கிளப்பி (பிராணனையும் அபானனையும் ஐக்கியப்படுத்திக் குண்டலினியை எழச் செய்து, ஸுஷும்னையின் வாயிலைத் திறந்துகொண்டு மூலாதார சக்கரத்தினுள் சென்று பிறகு) ஸ்வாதிஷ்டானத்தை அடைந்து, மூன்று தடவை பிரதட்சிணம் செய்து, மணிபூரகம் சென்று, அதன்பின் அநாஹத சக்கரம் வந்து (தியானத்திலிருந்து) அதையும் தாண்டி, விசுத்தி சக்கரத்தின் கீழ்ப் பாகத்தில் லிங்கவடிவில் உள்ள உள்நாக்கின் இருபுறமும் உள்ள மார்க்கங்களை விட்டு, உள் நாக்கின் நடுவிலுள்ள நாடி வழியாக விசுத்தி சக்கரத்தில் பிரவேசித்துப் பிராணனை அடக்கிப் பிறகு ஆக்ஞா சக்கரத்தை அடைந்து, மூன்று மாத்திரை வடிவமான பிரம்மமே நான் என்று சமாதியில் நின்று, பிறகு கீழ்நிலைக்கு இறங்கிய பொழுதும் எக்காலத்தும் அதையே பார்த்து (உடல் இருந்தும்) உருவம் இல்லாதவன்போல் ஆகிவிடுகிருன்.

அவ்விதம் துரியநிலை எய்தியவன் பரமஹம்ஸன். கோடி சூரியப்பிரகாசம் பொருந்தியவனும், எவனுல் இந்த உலகம் அனைத்தும்

வியாபிக்கப்பட்டுள்ளதோ அந்தப் பரமாத்மா வாகவே அவன் ஆகிவிடுகிறான்.

பிரம்மரந்திரத்திலிருந்து கீழே இறங்கி மீண்டும் இதயஸ்தானத்திற்குப் பன்னிரண்டிதழ்க் கமல வடிவான அநாஹத சக்கரத்திற்கு வரும்போது உலக ஜீவனுக்கு எட்டுவிதமான வகையில் மனதின் விருத்தி ஏற்படலாம்.

[குறிப்பு:- கீழ்நிலைக்கு வரும் இவனுடைய மனமும் பிரகிருதி வசத்தால் தூக்கம், சோம்பல், புண்ணியம், பாவம், விளையாட்டு, பொருளீட்டல் முதலிய வியாபாரங்களில் பூர்வ வாசனையால் ஈடுபட்டாலும் அதனால் இவன் தன் நிலையிலிருந்து வீழ்ச்சி அடைவதில்லை. ஹம்ஸரூபியான ஜீவன் அர்த்த மாத்திரை நாத வடிவினனாகப் பிரம்மத்தில் கரைந்தவனாகிறான். சதாகாலமும் ஹம்ஸ தியானத்தில் ஈடுபடுகிறான்.]

(பன்னிரண்டு இதழ்களுள் நாலு இதழ்கள் உலக விவகாரத்தைக் கடந்த நிலையைக் குறிப்பவை. மற்ற எட்டு இதழ்கள் எட்டு வகையான உலக விருத்திகளைக் குறிப்பவை.) கிழக்கு இதழில் மனம் புகுந்தால் புண்ணியத்தில் பிரவிருத்தி. தென்கிழக்கில் தூக்கமும் சோம்பலும் ஏற்படுகின்றன. தெற்கில் கொடுமையில் நோக்கம். தென்மேற்கில் பாவச் செயல்களில் விருப்பம். மேற்கில் விளையாட்டு. வடமேற்கில் நடத்தல் முதலியன. வடக்கில் ஞானிகளுக்கு ஆத்மரதியும் அஞ்ஞானிகளுக்குச் சிற்றின்பத்திலும் ஆசை. வடகிழக்கில் பொருளீட்டுவதில் ஆசை. கமலத்தின் நடுவில் வைராக்கியம். கேஸரத்தில் விழிப்புநிலை. கர்ணிகையில் கனவு நிலை. அதன் துவாரத்திலுள்ள லிங்கத்தில் ஸுஷுப்தி (உறக்கம்). இந்த இதயக் கமலத்தை விட்டெழுந்தால் துரீயம். அப்போது ஹம்ஸரூபியான ஜீவன் (அர்த்த மாத்திரை) நாத வடிவினனாக பிரம்மத்தில் கரைந்தவனாக ஆகிவிடுகிறான். அது துரீயாதீதம் எனப்படும் ஒப்புயர்வற்ற நிலையாகும்.

மூலாதாரத்திலிருந்து பிரம்மரந்திரம் வரை துரீய சொரூபம் சுத்தஸ்படிகம் போல் பிரகாசிக்கும். அந்த நாதப் பிரம்மம் பரமாத்மா என்று கூறப்படுகிறது.

அஜபாஹம்ஸ மந்திர ஜபம்

காலையில் துயிலெழுந்தது முதல் மறுநாள் காலை வரை இரவு பகல் முழுவதும் இடைவிடாமல் 'ஹம்' என்று உள்மூச்சும் 'ஸ' என்று வெளிமூச்சுமாக நிகழ்வது அஜபா ஹம்ஸ மந்திரம் எனப்படும்.

மானசிகமாக ஜபமும் தியானமும் பின் வருமாறு:

ஆறு என்று கணக்கிடப்பட்ட ஆறு ஆதார தேவதைகளான கணபதி, பிரம்மா, விஷ்ணு, ருத்திரன், ஜீவாத்மா, பரமாத்மா ஆகியோர் மூலம் இரவும் பகலும் 21,600 முறை செய்யாமல் செய்யப்படுவது 'ஹம்ஸ:, ஸோஹம்' என்ற இந்த ஜபமாகும்.

கர நியாஸம், அங்க நியாஸம் ஆகியவற்றுக்குப் பிறகு 'பூர்ப்புவஸ் ஸுவரோமி திதிக்பந்த:' தியானம்.

இவ்விதம் செய்து இதயத்தில் ஹம்ஸ மந்திர வடிவான ஆத்மாவைத் தியானம் செய்ய வேண்டும்.

அக்கினி வடிவான சூரியனும் குளிர்ச்சி வடிவான சந்திரனும் ஹம்ஸத்தின் இரண்டு சிறகுகள்; ஓங்காரம் தலை; மூன்று பிந்து முக்கண்; ருத்திரன் வாய்; ருத்திராணி பாதங்கள். இவ்விதம் ஹம்ஸத்தை நிர்க்குணமாகவும் சகுணமாகவும் இரண்டும் ஒன்றாகத் தியானித்துத் தொண்டைக்குள்ளேயே மௌனமாக ஜபம் செய்யவும். இதனால் மனம் பரமாத்மாவில் கரைந்து போவது 'அஜபோப ஸம்ஹாரம்' என்று கூறப்படுகிறது.

இவ்விதம் ஹம்ஸத் தியான வசத்தால் மனமும் அதன் செயலும் 'நேதி, நேதி' — 'இல்லை, ஆத்மாதான் உண்டு' என்பது ஆராய்ந்து உணரப்படுகிறது.

[ஹம்ஸ காயத்ரீ வருமாறு: ஹம்ஸ ஹம் ஸாய வித்மஹே பரமஹம்ஸாய தீமஹி। தந்நோ ஹம்ஸ: ப்ரசோத யாத் ॥

தியான சுலோகம் வருமாறு: அக்னீ ஷோம கருத்த் வயம் ப்ரணவகம் பிந்தூ த்ரிகோணேஜ் ஜ்வலம், பாஸ்வத் - ருத்ரமுகம் சிவாங்க்ரியு கலம் காலாக்னி பாஹுத்வயம். உத்யத்- பாஸ்கர - கோடிகோடி ஸத்ருசம்। ஜகத் வ்யா பகம், நாதப்ரஹ்மமயம் ஹ்ருதம்புஜபுடே நீடே ஸதா பாவயேத்- ॥

பத்து விதமான நாத அனுபவம்

இந்த அஜபாஹம்ஸ மந்திரத்தின் கோடி ஜபத்தால் சாதகன் அநாஹத நாதத்தை அனு பவிப்பான். அது பத்து விதமாக இருக்கும். 'சிணி' என்பது முதல். 'சிணி சிணி' என்பது இரண்டாவது. மணியோசை மூன்ருவது. சங்கநாதம் நான்காவது. வீணையொலி ஐந்தா வது. தாளம் ஆருவது. குழல் ஒலி ஏழாவது. பேரீநாதம் எட்டாவது. மிருதங்க ஒலி ஒன்பதா வது. மேகநாதம் பத்தாவது.

முதல் ஒன்பதையும் விட்டுப் பத்தாவதை அப்பியசிக்க வேண்டும்.

முதலில் சிஞ்சிணியின் ஒலி வடிவம் தோன் றும். இரண்டாவதில் அது மறையும். மூன்ரு வதில் இதயத்தின் முடிச்சுகள் பிளவுபடும். நான்காவதில் தலை நடுங்கும். ஐந்தாவதில் தாடையில் நீர் பெருகும். ஆருவதில் சிரத்தி லிருந்து அமிருதம் நாடிகளில் பாய்ந்து பேரின்ப மூட்டும். ஏழாவதில் மறைந்திருந்த ஆத்ம ஞானம் வெளிப்படும். எட்டாவதில் பரா வாக் சொரூபம் விளங்கும். ஒன்பதாவதில் உடலின் அந்தர்த்தானம் அதாவது மறைவு ஏற்படும். பத்தாவதில் பரிபூர்ணப் பிரம்மாத்ம சாட்சாத் காரத்தினுல் பிரம்மமாகவே ஆகிவிடுகிருன்.

ஆகையால், மனம் கரைந்து போய், சங்கல்ப விகல்பங்களும் புண்ணிய பாவங்களும் எரிந்து போன பிறகு ஜீவன் எப்போதும் ஒவ்வொரு பொருளிலும் சக்தியாக விளங்கும் சிவனுக எங்கும் நிறைந்தவனுகவும்சுயஞ்ஜோதியாகவும் பிரகாசிக்கிருன்; பரிசுத்தனுகவும் ஞானவடி வானவனுகவும், நித்தியனுகவும், மாசற்றவனு கவும், உத்தம சாந்தி சொரூபனுகப் பிரகாசிக் கிருன் என்பது வேதத்தின் அருள்வாக்கு ஆகும். ★

---

மேகம் காற்றில் கொண்டுவரப்படுகிறது; மீண்டும் அதனுலேயே கொண்டு போகப்படுகிறது. பிறவித் தளையானது மனதினுல் கற்பிக்கப்படுகிறது; பிறவித்தளை நீக்கமும் அதனுலேயே கற்பிக்கப்படுகிறது.

—விவேக சூடாமணி, 172

என்னுடைய நண்பர்கள் என்னை உண்மையாகவே பெருமைப் படுத்த வேண்டுமென நினைக் பார்களேயானுல், என் திட்டங்களைத் தங்களுடைய அன்ருட வாழ்க்கையில் நிறைவேற்றிக் காட்டட்டும். அவற்றில் நம்பிக்கை இல்லையானுல் என்னை முழுமூச்சுடன் எதிர்க்கட்டும்.

—காந்திஜி

கிறிஸ்துபெருமான், திருஞானசம்பந்தர் உட்படப் பல பெரியோர்களும் அற்புதங்கள் செய்திருக்கிருர்களே என்று நாம் நினைக்கக்கூடும். அற்புதங்கள் அவர்களைப் பெரியோராக்கவில்லை என்றும், அவர்களின் ஆன்மீக உயர்வுதான் அவர்களைப் பெரியோராக்கின என்பதையும் நாம் உணரவேண்டும்.

—திரு. வி. க.



# என் கருத்து

வாகீசகலாநிதி கி. வா. ஜகந்நாதன்

இறைவனை இறைஞ்சி அவனுக்கு ஆட்பட்டுத் தொண்டு செய்யும் இன்பத்தைவிடச் சிறந்த இன்பம் வேறு இல்லை. உடம்போடு பிறந்த நமக்கு உடம்பின் உறுப்புக்கள் எல்லாம் செயல் பட்டால்தான் உடல் நலம் செவ்வையாக இருக்கும். சில உறுப்புக்களுக்கு மட்டும் வேலை கொடுத்தால் மற்ற உறுப்புக்கள் செயல் செய்யாமையால் வலிமையை இழந்துவிடும். ஆகவே, எப்போதும் சுறுசுறுப்போடு இருப்பவர்களுக்கு உடல்நலம் சரியானபடி அமையும்.

உழைப்பாளி ஒருவன் பிறருக்காக வேலை செய்து ஊதியம் பெறுகிறான். அவன் உழைப்பது பிறருக்காக; ஆனால் அந்த உழைப்புக்கு உரிய பயனாகக் கூலியைப் பெறுகிறான். உழைப்புக்குத் தக்க கூலி கிடைக்காவிட்டால் வருந்துகிறான். பிறருடைய தோட்டத்தில் வேலை செய்கிறவனுக்கு அந்தத் தோட்டம் வளம் பெறுவதில் உள்ள கருத்தைவிடக் கூலி பெறுவதில்தான் கவனம் மிகுதியாக இருக்கும். நிர்ப்பந்தத்தினால் கூலி குறைவாகக் கிடைக்கும் இடத்தில் வேலை செய்தாலும், கூலியே இன்றிப் பணி புரிந்தாலும் அவனுக்கு உண்டாகும் மனக்குறை அதிகமாக இருக்கும்.

தனக்காகவே ஒருவன் உழைத்தால் அப்போது அவனுக்கு இன்பம் மிகுதியாகும். தன் தோட்டத்தில் மண்ணைக் கிளறிச் செடியை நட்டுத் தண்ணீர் விட்டு வேலை செய்கிறான். அவனுடைய உழைப்புக்குத் தனியே யாரும் கூலி கொடுப்பதில்லை. ஆனால் தோட்டம் நன்றாக வளரும்போது அவனுக்கு உண்டாகும் மகிழ்ச்சிக்கு எல்லையே இராது; அந்தத் தோட்டத்தில் விளையும் பொருள்களால் ஊதியமும் கிடைக்கிறது. தன் நலனுக்காகத் தானே உழைப்பதில் உண்டாகும் நன்மை இது.

இறைவனுடைய திருத்தொண்டில் ஈடுபடுகிறவர்கள் இத்தகைய நிலையில் இருப்பவர்கள். தன் தோட்டத்தில் வேலை செய்கிறவனுக்கு உழைப்பால் சிரமம் உண்டானாலும் அதை அவன் பொருட்படுத்துவதில்லை. அந்த உழைப்பிலே அவன் இன்பம் காணுவான். எசமானியின் குழந்தைகளுக்கு நீராட்டி ஆடை உடுத்தி அலங்கரிக்கும் வேலைக்காரிக்கு, அந்த வேலைகள் கூலிக்காகச் செய்பவை. அவளுடைய நாட்டம் அந்தக் குழந்தைகளின் நலத்தில் இராது; கூலியிலேதான் இருக்கும். ஆனால் தன் குழந்தையைக் குளிப்பாட்டி ஆடையணிந்து அலங்காரம் செய்யும் தாய்க்கோ மிக்க இன்பம் உண்டாகிறது. இறைவனுடைய திருத்தொண்டைச் செய்கிறவர்கள் அத்தகைய இன்பத்தையே பெறுகிறார்கள். 'இப்போது இறைவனைக் கும்பிடுவதிலே இன்பம் இருக்கிறது. வீட்டின்பம் என்பது எப்படி இருக்குமோ? இப்போது இன்பம் இல்லாமல் இருந்தால்தானே வேறு ஒன்றை நாடவேண்டும்; கும்பிட்டுத் தொண்டாற்றும் இன்பம் நிறைவாகக் கிடைக்கிறது. அப்படி இருக்க வேறு ஓர் இன்பம் எதற்கு? அது வேண்டாம்' என்று அன்பர்கள் நினைப்பார்களாம்.

''கூடும் அன்பினில் கும்பிட லேஅன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார்''

என்று அத்தகை அன்பர்களின் இயல்பைச் சேக்கிழார் சொல்கிறார்.

''முக்தியா? அப்படி ஒன்று தனியே இருக்கிறதா என்ன? நாங்கள் இப்போது அதைத் தானே அனுபவித்துக்கொண்டிருக்கிறோம்? பக்தி வழிபாடு என்னும் இதுதான் முக்தியின்பம். இதைப் போன்ற முக்தி வேறு ஏது?'' என்று அவர்கள் கேட்பார்களாம். இப்படி அருணகிரி நாதர் சொல்கிறார்.

''ஆனபய பக்திவழி பாடுபெறு முத்தியது
வாக நிகழ் பக்தஜன வாரக்காரனும்''

என்பது திருவகுப்பு.

''இந்தத் திருத்தொண்டு வேண்டாம். இதில் என்ன சுகம் இருக்கிறது? அண்டங்களையெல்லாம் ஆட்சி புரியும் பெரிய பதவியைத் தருகிறேன். எத்தனையோ வகையான இன்பங்களையெல்லாம் பெறலாம்'' என்று சொன்னால், ''அந்த அண்டங்கள் எமக்கு எளிதிலே கிடைத்தாலும் வேண்டாம். இந்த இன்பத்தை விட அந்த ஆட்சியில் ஏது சுகம்?'' என்று சொல்வார்கள் உண்மை அன்பர்கள். காரைக்கால் அம்மையார் அப்படித்தான் சொல்கிறார்.

அண்டம் பெறினும் அது வேண்டேன்.

இறைவனுடைய திருத்தொண்டில் ஈடுபட்டுக் கணந்தோறும் அந்த இன்பத்தில் ஆழ்வதைக் காட்டிலும் பெரிய இன்பம் அவர்களுக்கு வேறு இல்லை. இறைவனைக் கண்ணாரத் தரிசிப்பதிலே உண்டாகும் இன்பமும், அவனுடைய திருத்தொண்டிலே ஈடுபட்டு அங்கங்களையெல்லாம் அந்தத் தொண்டிலே செயற்படுத்தி வாழும் வாழ்வே இன்பமயமானது. அதை விட்டுவிட்டு வேறு எந்தச் செயல் செய்தாலும் அதில் இன்பம் இராது. ஆகவே அந்தக் கைப்பணியே இன்பம். அதைச் செய்யாமல் இருப்பது பெருந்துன்பம். 'இதை விட்டு விட்டுச் சும்மா இருக்க வேண்டாம். அண்டங்களை உரிமையாக்கிக்கொண்டு வாழலாம்' என்று போக்குக் காட்டினாலும், ''அந்தப் பொறுப்பு வேண்டாம். இந்தக் கைப்பணியே எமக்கு இன்பம் தருவது''என்று நினைப்பது தொண்டர் இயல்பு. அதைச் சொல்கிறார் அம்மையார்:-

கண்டு எந்தை என்று இறைஞ்சிக்
கைப்பணியான் செய்யேனேல்
அண்டம் பெறினும் அது வேண்டேன்.

இறைவனே, ''இந்த அண்டத்தை ஆளும் உரிமையைத் தருகிறேன்; பெற்றுக்கொண்டு சுகமாக இரு'' என்று சொன்னாலும் அதை வேண்டாம் -என்று சொல்லும் உறுதி அன்பர்களிடம் இருக்கிறது. கொடுப்பவன் பெரியவனானாலும், அவன் தருவது பெரிதென்று மற்றவர்கள் எண்ணினாலும், அன்பர்களுக்கு அத்தகைய பதவி மிகவும் சிறியதாகத் தோன்றும். அவனுக்குத் தொண்டாற்றும் இன்பமே எல்லாவற்றிலும் பெரிதாகத் தம் அனுபவத்தில் கண்டு பெருமிதத்தோடு இருப்பவர்கள் அன்பர்கள். ஆகவே

அண்டம் பெறினும், அது வேண்டேன்

என்கிறார் அம்மையார்.

இறைவன் எதை வேண்டுமானாலும் அருள் செய்பவன். எல்லாவற்றிலும் சிறந்த பொருளை வழங்குகிறவன் பெருவள்ளல். இறைவன் அத்தகைய வள்ளலாக இருக்கிறான். அவன் அவ்வாறு வழங்கும் வள்ளன்மை பெரிதுதான், ஆனால் அதை வேண்டாம் என்று சொல்பவரின் பெருமிதம் அதைவிடப் பெரியது.

'' கொள்ளெனக் கொடுத்தல் உயர்ந்தன்று;
அதன் எதிர் கொள்ளேன் என்றல்
அதனினும் உயர்ந்தன்று''

என்பது புறநானூறு. இறைவன் வழங்கும் வீட்டின்பம் மிகப் பெரியதுதான். பெரியது ஒன்றை வழங்கும் அவன் மாபெரும் வள்ளல். ஆனால் அதை மறுக்கும் பெருமிதம் அன்பர்களிடம் இருக்கிறது. அது இறைவனுடைய வள்ளன்மையைவிடச் சிறந்தது, ஆகவே

அண்டம் பெறினும் அதுவேண்டேன்

என்ற உறுதிப்பாடுடைய அம்மையார் மிகப் பெரியவர்.

தம்முடைய கருத்து இது என்று இறைவனிடமே அம்மையார் விண்ணப்பித்துக் கொள்கிறார்.

ஈது என் கருத்து

இறைவனை அடையாளம் கண்டு கொண்டவர் அம்மையார். அந்த அடையாளங்களைச் சொல்லி எம்பெருமானை விளிக்கிறார்.

அவன் தன் திருமுடியில் பிறையை அணிந்திருக்கிறான் பிறைக்கு மறு இல்லை. இறைவன் திருமுடியில் இருப்பதால், மறுவில்லாத அந்தச் சந்திரன் வளர்வதுமில்லை, தேய்வதும் இல்லை. இறைவனைச் சார்ந்தவர்கள் எந்த மறுவும் இன்றி, கிளர்ச்சி, தளர்ச்சிகள் இல்லாமல் என்றும் சலனமில்லாத நிலையில் இருப்பார்கள் என்பதை அந்தச் சந்திரன் புலப்படுத்துகிறான். இறைவன் குழந்தையைத் தலையில் தூக்கி வைத்துக் கொள்வது போலச் சந்திரனைத் திருமுடியின் மேல் வைத்திருக்கிறான். அதன் அருகே பாம்பை அணிந்திருக்கிறான். பாம்புக்கு அஞ்சும் திங்கள் இப்போது அதன் அருகே ஒளிவிட்டு விளங்குகிறது. நீதிமுறை வழுவாமல் கோல் செலுத்தும் மன்னன் நாட்டில் புலியும் மானும் ஒரு துறையில் நீர் அருந்தும் என்று சொல்வார்கள். புலிக்கு மானை அடிக்க வேண்டும் என்ற எண்ணமே இன்றி அஹிம்ஸையியல்போடு இருக்கும். மானும் அச்சம் நீங்கி நீரைப் பருகும். அவ்வண்ணமே இறைவன் திருமுடியில் பாம்பும் மதியும் கூடிக் குலாவுகின்றன. அந்தத் திங்களைப் பார்க்கும்போது, இறைவனுடைய தொடர்பினால் எத்தகைய அற்புதங்கள் நிகழும் என்பதை உணர்ந்து கொள்ளலாம். விண்ணிலே உலவும் திங்கள் இப்போது இறைவன் திருமுடியில் அமர்ந்ததனால் இந்த நிலை கிடைத்திருக்கிறது.

துண்டம்சேர், விண்ஆளும் திங்களாய் !

இறைவன் உலகம் எல்லாவற்றுக்கும் கண்ணாகத் திகழ்கிறான். உடம்பில் கண் எவ்வாறு தலைமை பெற்று விளங்குகிறதோ அவ்வாறு இறைவன் இருக்கிறான். அவனே எல்லா உயிர்களுக்கும் கண்ணாக நின்று உலகத்தைக் காட்டுகிறான். அவன் காட்டுவிக்க நாம் காணுகிறோம். உலகம் ஏழும் உயிர்கள் வாழும் இடம். அவ்வுயிர்களுக்கு அவன் கண். பெரிய உடம்பில் பல உறுப்புக்கள் இருந்தாலும், கண் இல்லாவிட்டால் சரிவர இயங்க இயலாது. இறைவன் கண்ணாக இருந்து உலகை இயக்குகிறான். ஏழுலகங்களுக்கும் மேலாக நின்று, கண்ணாக இருந்து, இயக்குகிறான். அந்தக் கண்ணாளனைப் பார்த்து, ''ஈது என் கருத்து'' என்று விண்ணப்பித்துக் கொள்கிறார் அம்மையார்.

கண்டு எந்தை என்று இறைஞ்சிக்
கைப்பணியான் செய்யேனேல்
அண்டம் பெறினும்
அதுவேண்டேன், துண்டம்சேர்
விண்ஆளும் திங்களாய்,
மிக்கு உலகம் ஏழினுக்கும்
கண்ணாளா, ஈதுஎன் கருத்து.

[துண்டமாகச் சேர்ந்ததும், வானிலே ஆட்சி புரிந்ததுமாகிய பிறையைத் திருமுடியில் புனைந்துள்ள பெருமானே, ஏழு உலகங்களுக்கும் மேலாக நிற்கும் கண்ணாக உள்ளவனே, உன்னைத் தரிசித்து 'எம் தந்தையே' என்று உன்னை வணங்கி, உன்னுடைய திருத்தொண்டை அடியேன் செய்யாமல் இருப்பேனாயின், அண்டத்தைப் பெற்றாலும் அந்தப் பதவியை அடியேன் வேண்டேன். இதுவே அடியேனுடைய கருத்து.

எந்தை - எம் தந்தையே. கைலையை அணுகிய அம்மையார், ''அப்பா!'' என்று சொல்லிப் புகுந்தார் என்பது வரலாறு. கைப்பணி-கையால் செய்யும் தொண்டு; கை என்று கூறினும் உடம்பு முழுவதும் உள்ள உறுப்புக்களைக் கொள்ள வேண்டும்; உபலட்சணம். அண்டம் பெறினும்-அண்டங்களை உரிமையாகப் பெற்று ஆட்சி புரியும் பேறு பெற்றாலும். அது-அந்தப் பதவியை. துண்டம்சேர் திங்கள், விண்ணாளுந்திங்கள் என்று தனித் தனியே கூட்டுக. துண்டம் என்றது பிறையை. விண்ணாளும் திங்கள் என்றது, அதன் பழைய நிலையைச் சுட்டியது. மிக்கு-மேலாக நின்று. கண்ணாளா-கண்ணைப்போல உள்ளவனே. ஈது-அண்டத்தையும் வேண்டாமை.]

அற்புதத் திருவந்தாதியில் உள்ள 72-ஆம் பாடல் இது. ★




## சரணம் என்று வந்தவரைக் கைவிடக்கூடாது

நரேந்திரன்

பகவான் ஸ்ரீகிருஷ்ணரின் அவதாரலீலை முடிந்த செய்தியைத் தர்மாத்மா யுதிஷ்டிரர் கேள்வியுற்றார். யாதவர் ஒருவருக்கு ஒருவர் கலகம் செய்துகொண்டு தத்தம் முடிவை எய்திவிட்டதை அறிந்துகொண்டார். அர்ஜுனன் மகனுகிய பரீட்சித்துக்கு முடிசூட்டிவித்தார்.

யுதிஷ்டிரர் தாம் அணிந்துகொண்டிருந்த விலையுயர்ந்த அணிகலன்களையும் பட்டாடைகளையும் களைந்துவிட்டு, எளிய உடைகளை அணிந்துகொண்டார். மௌனவிரதத்தை மேற்கொண்டு, தலையை அவிழ்த்துவிட்டுக்கொண்டு வீர சன்னியாசம் ஏற்று வடதிசையை நோக்கிப் புறப்பட்டுவிட்டார். அவருடன் மற்ற நான்கு சகோதரர்களும் மனைவி திரௌபதியும் புறப்பட்டனர்.

தர்மபுத்திரரான யுதிஷ்டிரர் மாயாமோகத்தைத் துறந்துவிட்டார். உணவு அருந்தவில்லை. நீர்கூடப் பருகவில்லை. இடையே எங்கும் தங்கி இளைப்பாறவுமில்லை. எந்தப் பக்கமும் திரும்பிப் பார்க்காமல், சிறிதும் நிற்காமல் சீராகச் சென்றுகொண்டே இருந்தார். உன்னதமான இமயமலை வந்தது. பத்ரிநாத க்ஷேத்திரத்தையும் கடந்து சென்றார். அவருடன் வந்த சகோதரர்களும் திரௌபதியும்கூட, அதே போன்று யுதிஷ்டிரரின் பாதையில் சென்றுகொண்டிருந்தார்கள்.

தர்மர் நடந்து வந்த நல்வழிப் பாதை முடிவுற்றது. சுவர்க்கலோகத்திற்குச் செல்லும் புண்ணியபூமிக்கு வந்தாயிற்று. இங்கு வந்தது முதல் முறையே திரௌபதி, நகுலன், சகதேவன், அர்ஜுனன் ஆகியோர் ஒவ்வொருவரும் வரிசைக் கிரமமாக விழத் தொடங்கினர்கள். யார் விழுகிறார்களோ அவர்கள் அங்கேயே இருந்துவிட்டார்கள். அந்தப் பனிப்பிரதேசத்தில் விழுந்தபிறகு எழுந்திருக்கச் செய்யும் முயற்சி பயனற்றுப் போகும். விழுந்த மறுகணமே பனி அவர்களின் உடலைச் சமாதி கட்டிவிடும். மிகவும் புனிதமான அந்த இடத்தில் உயிரை விடுபவர்கள் நிச்சயம் சுவர்க்கலோகத்தையே சென்றடைவார்கள். அவர்களைத் தடுக்க ஒருவராலும் இயலாது.

யுதிஷ்டிரர் மேலே சென்றுகொண்டிருந்தார். அவர் நிற்கவுமில்லை, கீழே விழுந்து விட்டவர்களின் பக்கம் திரும்பவுமில்லை. அவர் விருப்பு வெறுப்புகளுக்கு முற்றும் அப்பாற்பட்டவராகிவிட்டார். கடைசியில் பீமனும் விழுந்துவிட்டான்.

யுதிஷ்டிரர் சுவர்க்கத்திற்குச் செல்லும் பாதையாகிய உயரமான சிகரத்திற்குச் சென்று விட்டார். அப்போது வழியிலேயே திரௌபதியும் சகோதரர்களும் விழுந்துவிட்டனர். ஆனல் ஒரு நாய் மட்டும் அவருடன் இருந்தது. அது அஸ்தினபுரத்திலிருந்தே அவரைத் தொடர்ந்து வந்து கொண்டிருந்தது. யுதிஷ்டிரர் அந்தச் சிகரத்தின் உச்சியை அடைந்த அதே சமயம், இந்திரன் தன் விமானத்தில் ஏறிக்கொண்டு அங்கு வந்து ஆகாயத்திலிருந்து இறங்கினன்.

யுதிஷ்டிரரைக் கண்டதுமே அகமும் முகமும் மலர, தேவேந்திரன் அவரை வரவேற்ருன். ''உங்களுடைய அறச்செயல்களின் பயனுக இன்று சுவர்க்கம் முழுவதும் உங்களுடையதுதான். வாருங்கள், விமானத்தில் ஏறிக்கொள்ளுங்கள்'' என்று அன்புடன் அழைத்தான்.

யுதிஷ்டிரர் தேவேந்திரனிடம் தமது மற்றச் சகோதரர்களையும் மனைவி திரௌபதியையும்கூடச் சுவர்க்கத்திற்கு அழைத்துச் செல்லுமாறு வேண்டினர். அதற்குத் தேவேந்திரன், ''அவர்கள் எப்போதோ சுவர்க்கத்தை அடைந்து விட்டார்களே!'' என்ருன்.

யுதிஷ்டிரர் மறுபடியும் தமது இரண்டாவது வேண்டுகோளாக, ''சுவாமி! இந்த நாயையும் விமானத்தில் உட்கார அனுமதிக்க வேண்டும்'' என்ருர்.

**இந்திரன்:** தாங்கள் தர்மாத்மாவாக இருந்துகொண்டு இப்படிப்பட்ட வார்த்தைகளைச் சொல்லலாமா? சுவர்க்கத்திற்குள் நாய் எப்படிப் போக முடியும்? இந்தப் புனிதமற்ற விலங்கு என்னைப் பார்க்கக் கொடுத்துவைத்ததே பெரிது!

**யுதிஷ்டிரர்:** இது என்னை அண்டி வந்துள்ளது. என்மீது அது கொண்டுள்ள பக்தி காரணமாகவே அது அஸ்தினபுரத்திலிருந்து இவ்வளவு தொலைவு வந்திருக்கிறது. நம்மை அண்டி வந்தவரைக் கைவிடுதல் அதர்மச் செயலாகும். இதைக் கைவிடுவதில் எனக்கு விருப்பம் இல்லை. இது இல்லாமல் நான் தனியாகச் சுவர்க்கத்திற்குச் செல்வதை விரும்பவில்லை.

**இந்திரன்:** அரசே! சுவர்க்கம் என்பது அவரவர் செய்த புண்ணியச் செயலின் பலனுகக் கிடைக்கிறது. இந்த நாய் அப்படிப்பட்ட புண்ணியாத்மா என்ருல் ஏன் இப்படிப்பட்ட கீழ்த்தரமான நாய் உடலைப் பெற்றுள்ளது?

**யுதிஷ்டிரர்:** அப்படியானுல் நான் என் புண்ணியத்தில் பாதியை இதற்கு அளித்துவிடுகிறேன்.

தர்மபுத்திரர் அவ்விதம் சொல்லி முடித்ததும், ''யுதிஷ்டிரா நீ வாழ்க. வாழ்க!'' என்ற வாழ்த்தொலி கேட்டது. ''நான் உன்மீது மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன்'' என்று கூறியபடியே ஆசி வழங்கிக்கொண்டிருக்கும் தர்மதேவதையை யுதிஷ்டிரர் கண்டார்.

இவ்வளவு நேரமாக நாயின் வடிவத்தில் வந்து சோதித்தது தர்மதேவதையே என்பதைக் கண்ட தர்மபுத்திரர் மிகவும் பணிவுடன் தர்மதேவதையை வணங்கினர்!

# ஸ்ரீ சங்கரரின் வேதாந்தம்

பேராசிரியர் டி. கே. நாராயணன், எம். எஸ். சி.

'இன்பம் மட்டுமே வேண்டும், துன்பம் ஒரு போதும் வேண்டாம்' இதுதான் மனித குலத்தின் பொதுவான இலட்சியம். இல்லை, உயிரினம் அனைத்தினுடையவும் பொதுவான இலட்சியம் இதுதான்.

இன்பம் வேண்டும்! எத்தகைய இன்பம்? நிரந்தரமான இன்பம், அள்ள அள்ளக் குறையாத இன்பம், துன்பம் கலவாத இன்பம். இத்தகைய இன்பத்தை அடைய நாம் அனைவரும் ஓயாது முயன்று கொண்டிருக்கிறோம். ஆனால் பெருமுயற்சிக்குப் பின் பெறுவது என்னவோ, ஒருவிதத் தாற்காலிகமான இன்பம் விரைவிலேயே அதன் இடத்தைத் துன்பம் ஆக்கிரமித்துக்கொள்கிறது. இதுதான் உலகியல் இன்பத்தின் உண்மை நிலை.



இதனால்தான் பகவான் கீதையில், 'அநித்யம் அஸுகம் லோகம் இமம் ப்ராப்ய பஜஸ்வ மாம்' என்று அர்ஜுனனிடம் கூறுகிறார் போலும். 'துன்பம் சூழ்ந்த அநித்தியமான இவ்வுலகை அடைந்துள்ள நீ என்னை வழிபடுவாயாக' என்பது இதன் பொருள்.

அல்வா பிரியமான பண்டம்தான்; சந்தேகம் இல்லை. அல்வாவைப் பற்றிய எண்ணமே முதலில் இனிக்கிறது. முதல் அல்வாத் துண்டம் மிகமிக இனிக்கிறது. இரண்டாவது துண்டம் அந்த அளவு இனிப்பதில்லை. அல்வாவின் அளவு அதிகரிக்கின்ற அளவு அதன் ருசி குறைகிறது. ஒரு குறிப்பிட்ட அளவிற்கு மேல் 'போதும் போதும்' என்ற வெறுப்புநிலை ஏற்பட்டு விடுகிறது. முதலில் இனித்த அல்வா, பின்பு கசக்கிறது. அதாவது குமட்டுகிறது. இல்லையா? அப்படியானால் அல்வாவினால் முதலில் பெற்ற இன்பம் எத்தகையது? தற்காலிகமானது, தோன்றி மறையக்கூடியது; போலியானதுதான்.

இந்த நிலை உலகத்துப் பொருள்கள் அனைத்திற்கும் பொருந்தும். அதாவது நமக்கு புறம்பான பொருள் எதுவானாலும் அதிலிருந்து நாம் இன்பத்தைப் பெற முயலுகிறோம். சில வேளைகளில் அதைப் பெற்றுவிட்டதாகக் கருதுகிறோம். ஆனால் இறுதியில் போலி இன்பத்தைப் பெற்றுத் துன்பத்திற்கு ஆளாகி ஏமாற்றத்திற்கு உள்ளாகிறோம்.

மனிதர்களின் இந்தப் பரிதாபநிலையை ஆதி சங்கரர் பார்த்தார். பரிதாபம் கொண்டார். ''ஐயோ கானல்நீரை நோக்கி ஓடி ஓடி அலைந்து மாயும் மானைப்போல அல்லவா இந்த மக்கள் மக்கள் அல்லற்படுகின்றனர்! இவர்களுக்கு உண்மையறிவைப் புகட்ட வேண்டும்'' எனத் திருவுளம் கொண்டார். சிறந்த பரமார்த்திகக் கருத்துக்களை, வேதத்தின் உட்பொருளை, உபநிடத சாரத்தைத் தெள்ளத் தெளிவாக மக்களுக்குத் தமது பாஷ்யங்கள் மூலம், பல்வேறு சுலோகங்கள் மூலம் எடுத்துரைத்தார்.

''உண்மையின்பம் புறத்தே இல்லை; தன்னகத்திலேயே உள்ளது. மனிதன் உண்மையில் ஆத்ம சொரூபமே. அந்த ஆத்மா இன்பமயம். அந்த ஆன்மாதான் அனைத்துமாகத் தோன்றுகிறது. அந்த ஆத்மனே பிரம்மம். ஆதியும் அதுவே. அந்தமும் அதுவே. தன்னை ஆன்ம சொருபமாகக் கருதி அந்த எண்ணத்தில் நிலைத்திருப்பவன் அழியாத அமர ஆனந்த நிலையை எய்துகிறான்'' என்பதே அவரது போதனையின் சாரம்.

கணவன் மனைவியை நேசிப்பது, மனைவி கணவனை நேசிப்பது, புத்திரர் தந்தையை நேசிப்பது-இவ்விதம் உலகில் நேசிக்கப்படும்

அனைத்தும் அவற்றினிடம் உள்ள இன்பத்திற்காகவே அல்லாமல் ஆத்மாவில் உள்ள இன்பத்திற்காகவே அதாவது தன்னிடமுள்ள இன்பத்திற்காகவே நேசிக்கப்படுகின்றன என்று உபநிடதம் இந்தக் கருத்தை அழகாக விளக்குகிறது.

ந வாஅரே பத்யு; காமாய பதி: ப்ரியோ பவதி ।
ஆத்மனஸ்து காமாய பதி : ப்ரியோ பவதி ।।
ந வாஅரே ஜாயாயை காமாய ஜாயா ப்ரியா பவதி ।
ஆத்மனஸ்து காமாய ஜாயா ப்ரியா பவதி ।।

— பிருஹதாரண்யக உபநிடதம்.

கணவன் பொருட்டுக் கணவன் பிரியமானவன் அல்லன்; ஆத்மாவிற்காகவே அவன் பிரியமானவன். மனைவிக்காக மனைவி நேசிக்கப்படுவதில்லை; 'ஆத்மனுக்காக', 'தனக்காக' தன் பொருட்டு நேசிக்கப்படுகிறாள்.

இவ்வுலகில் ஒருவன் மற்ற அனைத்தைக் காட்டிலும் அதிகமாக நேசிப்பது எதை? தன்னைத்தான். மற்ற அனைத்தும் இந்தத் 'தான்' அல்லது ஆன்மாவுடன் தொடர்புடைய காரணத்தால் நேசத்துக்கு உரிமையாகின்றன. என்? அவையும் ஆன்மமயமே, எனவே நிரந்தரமான இன்பத்தை வேண்டும் நான் என்ன செய்ய வேண்டும்? அனைத்தையும் 'தன்மய'மாக அதாவது ஆன்மமயமாகக் காணவேண்டும். அப்படிக் கண்டால் இன்பம்; காணுவிட்டால் துன்பம். 'நான் வேறு, நீ வேறு' என்றால் துன்பம். அங்கே வேற்றுமை வந்துவிடுகிறது. துவந்துவம் அல்லது இருமை ஏற்பட்டால் துன்பமே. 'எல்லாம் என்மயமே' என்ற இடத்து வெறுப்பு இல்லை, பூசல் இல்லை, அளவற்ற இன்பம் மட்டுமே எஞ்சுகிறது.

'அனைத்தும் ஒன்றே. அந்த ஒன்றே பிரம்மம் அல்லது பரமாத்மா' என்றார் ஆதிசங்கரர். வேதங்கள் கூறுவதும் அதுவே. பிரம்மத்திற்கு அன்னியமாக எதுவும் இல்லை என்பது சங்கரர் கண்ட முடிவு.

'உலகமே மெய். பிரம்மம் என்று எதுவும் கிடையாது' என்றனர் சார்வாகர்.

'பிரம்மம், உலகம் ஆகிய இரண்டுமே மெய்' என்றனர் நியாயவாதிகள்.

பிரம்மம், பிரபஞ்சம் ஆகிய இரண்டையுமே மறுத்தனர் புத்தமதத்தவர்.

இந்தக் குழப்பங்களுக்கு ஒரு முற்றுப்புள்ளி வைக்க விரும்பிய பகவத்பாதர் ஆதிசங்கரர், பிரம்மமே மெய். அனைத்தும் பிரம்மசொருபமே. இந்த ஜகத் அல்லது பிரபஞ்சம் ஒரு பொய்த் தோற்றமே. ஜீவன் அடிப்படையில் பிரம்மமேயன்றி வேறு அல்ல' என்று ஆணித்தரமாக எடுத்துரைத்தார்.

'இதோ இந்த மரம், இந்தக்கட்டிடம், இந்த மலை, இந்தக்கடல் எல்லாவற்றையும் நான் தொட்டு உணர்கிறேனே. இவை எப்படிப் பொய்யாக முடியும்?' என்ற ஐயத்தைக் கிளப்புகிறார் ஓர் அன்பர்.

இவையெல்லாம் 'மாயை' என்பது ஸ்ரீசங்கரர் கருத்து.

எது மாயை? 'மாயா' என்ற வார்த்தையிலேயே அதன் விளக்கமும் பொதிந்து கிடக்கிறது.

'யா மா ஸா மாயா'-அதாவது எந்த ஒன்று சற்று முன்பு இருந்தது போன்று இப்போது இருப்பதில்லையோ, அது மாயை' என்பது மாயைக்கான பல விளக்கங்களுள் ஒன்று.

'ப்ரஹ்ம ஸத்யம், ஜகன் மித்யா ஜீவோ ப்ரஹ்மைவ நாபர': என்ற ஸ்ரீசங்கரரது வாக்கியத்தில் உள்ள 'மித்யா' என்ற பதம் 'பொய்' அல்லது 'உண்மையில் இல்லாதது' என்று பொருள்படுகிறது.

மேற்கூறிய மாயைக்கான விளக்கத்தை இன்றைய விஞ்ஞானம் ருசுப்படுத்துகிறது. அண்டம் சுழல்கிறது, அணுவும் சுழல்கிறது. அணுவிற்குள் உள்ளது உட்கரு. அந்த உட்கருவைச் சுற்றி உள்ள அநேக எலக்ட்ரான்கள்

ஓயாது சுழன்று கொண்டிருக்கின்றன. வினாடிக்கு வினாடி அவை மாற்றமடைந்துகொண்டே இருக்கின்றன. அந்த எலக்ட்ரான் துகளா? அலைவடிவா? அதுவும் உறுதியாகக் கூற இயலவில்லை.

உலகில் உள்ள அனைத்தும்-நாம் உட்பட அனைத்துமே எலக்ட்ரான்களின் தொகுப்பேயாகும். அவையோ ஓயாது மாறிக்கொண்டேயிருக்கின்றன. எனவே சற்று முன்பு இருந்தது போல் நாம் இப்போது இல்லை. ஏன்? வினாடிப் பொழுதில் நம் உடலில் எத்தனையோ மாற்றங்கள் நிகழ்ந்து விட்டன. மாறுவது எப்படி மெய்யாக இருக்க முடியும்? எனவே அது பொய் அல்லது மாயை. அதாவது நமது உடல், மனம் ஆகிய எல்லாம் பொய். ஆனால் மாறும் அவற்றிற்கிடையில் மாறாத ஒரு தத்துவம் உள்ளது. அதுவே ஆன்மதத்துவம். அது ஒன்றே மெய். மெய்யைப் பொய் மறைத்துக்கொண்டிருக்கிறது. பொய்யிலிருந்து மெய்யைப் பகுத்து அறிவது பகுத்தறிவு. அதுவே மெய்யறிவு. அந்த மெய்யறிவை அடைவதே வாழ்வின் இலட்சியம். எங்கும் எதிலும் இறைவனைக் காண்பதே மெய்யறிவு.

'இறைவனுக்கும் தனக்கும் வெகுதூரம் என்று உணர்வது அஞ்ஞானம். இங்கு இத்தனையுமாக இருப்பது ஈசன் என்று உணர்வது ஞானம். மகாமாயை பிரம்மசொருபத்தை மறைத்திருக்கிறது. இந்த மறைப்பு நீங்கியதும் நான் யாண்டும் உள்ளபடி இருக்கிறேன்; நானே நீ, நீயே நான் என்னும் முடிவான அனுபவம் வருகிறது' என்று ஞானத்தைப்பற்றிப் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் மிகத் தெளிவாகத் திருவாய் மலர்ந்தருளுகிறார்.

சாட்சாத் சிவபெருமானின் அவதாரமாகிய ஸ்ரீ சங்கர பகவத்பாதரின் உயரிய அத்வைதக் கருத்துக்களை உள்ளபடி உணர்ந்து நாம் வாழ்வில் அமைதியையும் ஆனந்தத்தையும் அடைய முயல்வோமாக. ★

## திருவாசகத்தில் ஒரு பாடல்



குறைவிலா நிறைவே! கோதிலா அமுதே!
ஈறிலாக் கொழுஞ்சுடர்க் குன்றே!
மறையுமாய் மறையின் பொருளுமாய் வந்தென்
மனத்திடை மன்னிய மன்னே!
சிறைபெறா நீர்போல் சிந்தைவாய்ப் பாயும்
திருப்பெருந் துறையுறை சிவனே!
இறைவனே! நீ என் உடலிடம் கொண்டாய்!
இனியுன்னை என்இரக் கேனே!

இறைவன் நாம் எண்ணி விரும்பியவற்றை எல்லாம் கொடுக்கும் கற்பகத் தரு; எவ்வளவு எடுத்தாலும், எடுக்க எடுக்கக் குறையாத பெருநிதிக் குவியல்; அவன் உண்ணத் தெவிட்டாத அமுதம்; உடலுக்கும் உள்ளத்துக்கும் இன்பம் தரும் அமுதம்; அவன் ஒரு பெரிய சுடர்க் குன்றம்; என்றும் மங்காத, குன்றாத, அழியாத பேரொளி பொருந்திய சோதிமலை. அவன் வேதங்களாக நிற்பவன்; வேதங்களின் முடிவான பொருளாகவும் நிற்பவன். வேதங்களாகவும் வேதப்பொருளாகவும் என் உள்ளத்திலே புகுந்து நிற்பவன், நிலைத்திருப்பவன். அணையால் தடுக்கப்படாத வெள்ளம்போல் என் உள்ளத்தில் விரைந்து புகுந்தவன் திருப்பெருந்துறைப் பெருமான். இத்தகைய இறைவன் என் உடம்பையே தான் குடியிருக்கும் கோயிலாகக் கொண்டான். இனி அவனை இரந்து வேண்டுவது ஒன்றுமே எனக்கு இல்லை. என் உள்ளத்தில்—என் உடம்பில்—நிலைத்து வாழ்கிறவனிடம் நான் இரந்து கெஞ்சிக் கேட்பதற்கு என்ன இருக்கிறது? என் தேவைகளையெல்லாம் அவனே அறிவான். ஆதலால் அவனாகவே எல்லாவற்றையும் அருள்வான்.



# முத்துமாலை விளைவித்த குழப்பம்

எம். நாகசுப்ரமண்யம்

1

நீண்ட நெடுங்காலத்திற்கு முன்பு காசிமா நகரத்தைப் பிரம்மதத்தன் என்ற அரசன் ஆண்டு வந்தான். அப்போது போதிசத்துவர் காசியில் பிறந்தார். அவர் குருகுலவாசம் மேற்கொண்டு சகல வேதசாஸ்ரங்களையும் கலைகளையும் கற்றுத் தேர்ந்த பின்பு, பிரம்மதத்தனின் அமைச்சர்களுள் ஒருவராகப் பதவி ஏற்ருர்.



ஒரு சமயம் அரசன் தனது நெருங்கிய நண்பர்களுடன் அரண்மனையிலிருந்த பூங்காவிற்குச் சென்று உல்லாசமாகப் பொழுது போக்கினன். அப்போது அரசன் அங்கிருந்த நீச்சல் குளத்தில் தன் ராணிமார்களுடன் ஜலக்கிரீடை செய்ய விரும்பினன். ஆகவே ராணிகள் தாங்கள் அணிந்திருந்த ஆடையாபரணங்களை கழற்றி ஒரு பெட்டியில்வைத்து, அந்தப் பெட்டியை அரண்மனையைச் சேர்ந்த அடிமைப் பெண்களின் பாதுகாப்பில் வைத்தனர். பிறகு ராணிகள் அனைவரும் மிகுந்த குதுகலத்துடன் குளத்தில் இறங்கி ஜலக்கிரீடையில் ஈடுபட்டனர்.

பட்டத்தரசி தன் நகைகளையும் ஆடைகளையும் களைந்து பெட்டியில் வைத்தபோது, ஒரு பெண் குரங்கு பக்கத்திலிருந்த ஒரு மரத்தில் ஒளிந்து கொண்டிருந்தது. அது அரசியின் செயலைக் கூர்ந்து கவனித்தது.

ராணியின் நகைகளில் குறிப்பிடத்தக்க வகையில் விலையுயர்ந்த ஓர் அழகிய முத்துமாலை இருந்தது. அந்த முத்துமாலை பெண்குரங்கின் உள்ளத்தை மிகவும் கவர்ந்தது. முத்துமாலையை எப்படியாவது அபகரித்துத் தான் அணிந்து கொள்ள வேண்டும் என்ற பேராவல் குரங்கின் உள்ளத்தில் தீவிரமாக எழுந்தது.

அடிமைப்பெண் நகைகள் அடங்கிய பெட்டியை மிகவும் ஜாக்ரதையுடன்தான் பாதுகாத்துக் கொண்டிருந்தாள். ஆனல் நேரம் செல்லச் செல்ல தன்னையும் அறியாமல் அந்தப் பெண் அயர்ந்து உறங்கிவிட்டாள். அந்தக் குரங்கு, இதுதான் தகுந்த சமயம் என்று கருதி, வாயு வேகத்தில் கீழே குதித்து, ஒரு நொடியில் பெட்டியிலிருந்த ராணியின் முத்துமாலையை மட்டும் எடுத்துக்கொண்டு மீண்டும் மரத்தின் மீது ஏறிக்கொண்டது.

தன் கழுத்தில் விலையுயர்ந்த அந்த முத்துமாலையை அணிந்து கொண்டு குரங்கு அழகு பார்த்தது. முத்து மாலையை அணிந்திருக்கும் பெருமிதத்தில் அது மகிழ்ச்சியின் எல்லைக்கே சென்றுவிட்டது.

சிறிது நேரம் கழிந்தது. அந்தக் குரங்குக்குத் தன்னிடம் இருக்கும் முத்துமாலையை மற்ற குரங்குகள் பார்த்துப் பொருமைப்பட்டுப் பறித்துக்கொண்டு போய் விடுமோ என்ற பயம் தோன்றியது. ஆகவே அது அவசர அவசரமாகத் தன் கழுத்திலிருந்த முத்துமாலையைக் கழற்றி, மரத்தில் மறைவாக இருந்த ஒரு பொந்தின் உட்பகுதியில் பாதுகாப்பாக வைத்துவிட்டு, ஒன்றுமே தெரியாத சாதுக் குரங்காக உட்கார்ந்துகொண்டது.

2

சற்று நேரத்தில் பெட்டிக்குப் பாதுகாப்பாக இருந்த அடிமைப்பெண் உறக்கம் கலைந்து எழுந்தாள். உடனே அவள் நகை வைத்திருந்த பெட்டி தாறுமாருக அலங்கோலப்பட்டிருந்ததைப் பார்த்தாள். கவனித்துப் பார்த்ததில்

ராணியின் முத்துமாலை காணாமற் போயிருப்பது அவளுக்குத் தெரிந்து விட்டது! அவள் செய்வ தறியாமல் ராஜதண்டனைக்குப் பயந்த நிலையில் மிகவும் பரபரப்படைந்தாள். அந்த நிலையில் அவள் அழுதுகொண்டே, ''யாரோ ராணியின் முத்துமாலையைத் திருடிவிட்டார்கள்!'' என்று உரத்த குரலில் கூச்சல் போட்டு அலறினாள். அவளது கூக்குரல் அனைவரின் கவனத்தையும் ஈர்த்தது. நாலாபக்கங்களிலிருந்தும் காவலா ளிகள் அடிமைப்பெண் இருந்த இடத்திற்கு ஓடோடி வந்தனர்.

அரசனுக்குச் செய்தி தெரிவிக்கப்பட்டது. அவன் மிகுந்த கோபத்துடன், ''அந்தத் திருடனை உடனே பிடித்து வந்து என்முன் நிறுத்துங்கள்!'' என்று உத்தரவிட்டான்.

அங்கிருந்த மக்களிடையே ஒரே பரபரப்பு. 'இவ்வளவு கட்டுக்காவல் இருக்கும்போது, இதை மீறி யார் முத்து மாலையை எடுத்திருப் பார்கள்?' என்று நினைத்து அனைவரும் வியப்பும் திகிலும் கொண்டனர்.

அங்கிருந்த எல்லோரும் எந்தவிதப் பாகுபாடு மின்றிச் சோதனைக்கு உட்படுத்தப்பட்டார்கள்.

கோட்டைக்குள் நடந்துகொண்டிருந்த இந்த ஆரவாரங்கள், மதில் சுவருக்கு வெளியில் தற்செயலாகப் போய்க்கொண்டிருந்த எளிய ஒரு கிராமவாசியின் காதில் விழுந்தன. விவரம் என்னவென்று புரியாத நிலையில் ஆரவா ரத்தைக் கேட்டுப் பயந்த அந்த அப்பாவி கிராமவாசி, அங்கிருந்து போனால் போதும் என்று வேகமாக ஓட ஆரம்பித்தான்.

கிராமவாசி ஓடுவதை வெளிப்புறத்துக் காவலாளிகள் பார்த்துவிட்டனர். அவர்கள் கிராமவாசியைத் திருடன் என்று நினைத்து, ''அதோ திருடன் ஓடுகிறான். விடாதே, பிடி!'' என்று கத்திக்கொண்டு வேகமாகத் துரத்திச் சென்று, கிராமவாசியைப் பிடித்துவிட்டனர். அதோடு அவர்கள் கிராமவாசியைப் பலமாக அடி அடி என்று அடித்து நொறுக்கினர். அப்பாவி கிராமவாசி அடி பொறுக்கமாட்டாமல் நடுங்கிக் கதறினான். அதைக் கண்டு காவலாளி களின் சந்தேகம் மேலும் அதிகமாயிற்று. பிறகு கிராமவாசி சிறிது யோசித்து, 'இந்த அடியிலிருந்து தப்ப வேண்டுமானால், நான்தான் அந்த முத்துமாலையைத் திருடினேன் என்று சொல்வதைத் தவிர வேறு வழியே இல்லை' என்று தீர்மானித்து, தானே முத்து மாலையைத் திருடியதாக ஒப்புக்கொண்டான்.

3

உடனே காவலாளிகள் கிராமவாசியைக் கைது செய்து அரசனின் முன்பு இழுத்துக் கொண்டுபோய் நிறுத்தினர்.

அரசன் ''நீ அந்த முத்துமாலையைத் திருடி யது உண்மைதானா?'' என்று கிராமவாசியை விசாரித்தான். அப்பாவி கிராமவாசிக்கு ராஜ சபையும் ராஜ விசாரணையும் முற்றிலும் புதிது. பதில் சொல்லத் தெரியாத நிலையில் மருண்டு கொண்டிருந்த அவனுக்குத் திடீரென்று ஒரு யோசனை தோன்றியது. ''ஆம். நான்தான் முத்துமாலையைத் திருடினேன். நான் வாழ்க்கை யில் எந்தச் சுகத்தையும் அனுபவித்ததில்லை. என் வீட்டில் படுப்பதற்குக்கூடச் சரியான வசதி இல்லை. அப்படிப்பட்ட தரித்திரம் மிக்க ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்தவன் நான். அரண்மனைப் பொற்கொல்லர்தாம் என்னை முத்துமாலையைத் திருடும்படி தூண்டினார். திருடியதை நான் அவரிடம் கொண்டுபோய்க் கொடுத்துவிட்டேன். இந்தக் குற்றத்தை நானா கச் செய்யவில்லை. இந்த ஒரு தடவை என்னை மன்னித்து விடுதலை செய்யுங்கள்'' என்று சொல்லிக் கிராமவாசி அரசனிடம் மன்றாடி னான்.

உடனே அரசன் அரண்மனைப் பொற்கொல் லனை அழைத்து வரும்படி உத்தரவு பிறப்பித் தான். பொற்கொல்லன் வந்து சேர்ந்ததும் அரசன் அவனிடம், ''ராணியின் களவு போன முத்துமாலையை இந்தக் கிராமவாசி உன்னிடம் கொடுத்தது உண்மைதானா?'' என்று வின வினான்.

பொற்கொல்லனுக்கு முதலில் ஒன்றும் புரியவில்லை பிறகு, 'இங்கிருக்கும் சூழ்நிலையில் உண்மையைச் சொன்னால் ஒருவரும் ஒப்புக் கொள்ளமாட்டார்கள். நானும் கிராமவாசியின் யோசனையைப் பின்பற்றி இந்தச் சங்கடத்திலிருந்து தப்புவதுதான் வழி' என்று தீர்மானித்தான். அந்தத் தீர்மானத்துடன் அவன், ''ஆமாம், கிராமவாசி சொல்வது உண்மை தான்'' என்று அரசனின் வினவிற்குப் பதில் அளித்தான்.

''அப்படியானால் அந்த முத்துமாலை இப்போது எங்கே?'' என்றான் அரசன். பொற்கொல்லன், அதை அரண்மனைப் புரோகிதரிடம் கொடுத்து விட்டதாகக் கூறினான்.

அடுத்துப் புரோகிதர் வரவழைக்கபபட்டார். அரசன் புரோகிதரை விசாரித்தான். புரோகிதர் நிலைமையைப் புரிந்துகொண்டு, ''நான் அதை ஆஸ்தான சங்கீத வித்துவானிடம் கொடுத்துவிட்டேன்'' என்று தாம் தப்பித்துக் கொள்வதற்காகக் கூறினார்.

அரசன் சங்கீத வித்துவானை வரவழைத்து விசாரித்தான். சங்கீத வித்துவான் நிலைமையைப் புரிந்து கொண்டு, புரோகிதரிடமிருந்து பெற்ற முத்துமாலையை அரண்மனை நாட்டியக்காரிக்கு அன்பளிப்பாகக் கொடுத்துவிட்டதாகக்கூறினார்.

அரசன் நாட்டியக்காரியை வரவழைத்து விசாரணை செய்தான். அவளோ அசாதாரணமான துணிச்சலுடன், ''என்னிடம் யாரும் திருட்டுப் போனதாகச் சொல்லப்படும் அப்படி ஒரு முத்து மாலையைத் தந்ததே இல்லை. சங்கீத வித்துவான் அப்பட்டமான பொய் சொல்கிறார்!'' என்று கூறி அனைவரின் குட்டையும் உடைத்து விட்டாள்.

இவ்விதம் ஐந்து பேரையும் விசாரித்து முடிப்பதற்குள் சூரியன் அஸ்தமித்துவிட்டது. ஆகவே அரசன் மறுநாள் விசாரணை தொடரும் என்று அறிவித்து, அந்த ஐவரையும் அமைச்சர்களிடம் ஒப்புடைத்தான்.

4

''அப்போது போதிசத்துவராகப் பிறந்திருந்த புத்தபிரான், முத்துமாலை களவு போனதிலிருந்து நடைபெற்ற எல்லா நிகழ்ச்சிகளையும் கோவையாகச் சிந்தித்துப் பார்த்துத் தீவிர ஆலோசனை செய்தார் :-

அரண்மனையோ ஆயுதம் தாங்கிய காவலாளிகளின் பலத்த கண்காணிப்பில் இருக்கிறது. இந்தக் கட்டுக் காவலைமீறி இந்த ஏழை கிராமவாசி எப்படி அரண்மனைக்குள் புகுந்திருக்க முடியும்? இது நடந்திருக்க வழியில்லை. அப்படியே அரண்மனைக்குள் புகுந்து முத்துமாலையைத் திருடி இருந்தாலும்கூட, காவலர்களின் கண்களுக்குத் தப்பி அரண்மனையை விட்டு இவன் எப்படி வெளியே சென்றிருக்க முடியும்? இந்தத் திருட்டை அரண்மனைக்கு உள்ளேயோ வெளியேயோ இருக்கும் எவரும் செய்திருக்க வழியில்லை. உண்மையில் நடந்தது இதுவாகத் தான் இருக்க வேண்டும். அரண்மனைக்கு உள்ளேயும் வெளியேயும் பலத்த சோதனைகள் துவங்கியவுடன் பேதை கிராமவாசி மிரண்டு ஓடியிருக்கிறான். இதுதான் சமயம் என்று காவலாளிகள் அந்த அப்பாவி மனிதனைப் பிடித்து அடித்தும் உதைத்தும் திருடியதாக ஒப்புக்கொள்ளச் செய்திருக்கிறார்கள். கிராமவாசியோ உயிர் தப்பினால் போதும் என்று நினைத்து, தான் திருடியதாகவும் திருடியதைப் பொற்கொல்லனிடம் கொடுத்ததாகவும் பொய் சொல்லியிருக்கிறான். கிராமவாசியைப் போலவே பொற்கொல்லனும், புரோகிதரிடம் முத்து மாலையைக் கொடுத்ததாகக் கூசாமல் பொய் சொல்லியிருக்கிறான். புரோகிதர் தமது செல்வாக்கால் தம்மைக் காப்பாற்றக்கூடும் என்று ஒருவேளை பொற்கொல்லன் நினைத்திருக்கக் கூடும். புரோகிதரோ, 'எப்படியும் அனைவரும் சிறைச்சாலைக்குப் போக வேண்டியிருக்கும். அங்கே நல்ல சங்கீதத்தையாவது கேட்டுப் பொழுது போக்கலாம்' என்று நினைத்துச் சங்கீத வித்துவானை இந்தச் சங்கடத்தில் மாட்டிவிட்டிருக்கலாம். சங்கீத வித்துவான் ஓர் அயோக்கியனாக இருக்க வேண்டும். ஆகவேதான்

அவன் சிறைச்சாலையில் பொழுது போக்க விலைமகள் என்ற காரணத்தினால் நாட்டியக் காரியை இந்தத் திருட்டில் சம்பந்தப்படுத்தி யிருக்கிறான். ஆனால் அவளோ தைரியமாகத் துணிந்து, தன்னிடம் ஒருவரும் ராணியின் முத்துமாலையைக் கொடுக்கவில்லை என்ற உண் மையைச் சொல்லியிருக்கிறாள். இந்த ஐந்து பேர்களில் ஒருவருமே திருட்டுப் போன மாலை யைப் பார்க்கவுமில்லை; இவர்களில் ஒருவரும் இந்தத் திருட்டில் சம்பந்தப்பட்டிருக்கவும் வாய்ப்பில்லை. களவு நடந்ததாகச் சொல்லப் படும் இடத்தில் குரங்குக் கூட்டம் ஒன்று இருக் கிறது. அந்தக் குரங்குகளில் ஏதோ ஒரு பெண் குரங்குதான் இந்தத் திருட்டைச் செய்திருக்க வேண்டும் இதற்குள் அந்தக் குரங்கு முத்து மாலையைப் பிய்த்துக்கூட எறிந்திருக்காலம்'' என்று நினைத்த போதிசத்துவர் தீர்மானமாக ஒரு முடிவுக்கு வந்தார்.

பிறகு அவர் அரசனிடம் சென்று, ''அரசே, முத்துமாலைத் திருட்டில் சம்பந்தப்பட்ட ஐந்து பேரையும் என்னிடம் ஒப்படைக்கக் கோரு கிறேன். நான் அவர்களைத் தனிப்பட்ட முறை யில் விசாரித்து, நடந்த உண்மையைக் கண் டறிந்து, முத்துமாலையையும் மீட்டுத் தரு கிறேன்'' என்று கேட்டுக்கொண்டார்.

அரசனும் போதிசத்துவரின் யோசனைக் கிணங்கி உடனே அனுமதி வழங்கினான்.

5

போதிசத்துவர் நம்பிக்கைக்கு உரிய அரண் மனைச் சேவகர்கள் சிலரை அழைத்தார். அவர் களிடம், ''ஐந்து கைதிகளையும் தனியான ஒரு வீட்டில் இன்றிரவு தங்கச் செய்து நீங்கள் கண் காணிக்க வேண்டும். அவர்களுக்கிடையில் நடைபெறும் உரையாடல்களை மிகுந்த கவனத் துடன் இரகசியமாக இருந்து கவனியுங்கள். அவர்கள் பேசுவதை ஒரு வார்த்தை விடாமல் அப்படியே என்னிடம் வந்து தெரிவியுங்கள்'' என்று கட்டளையிட்டார்.

சேவகர்கள் போதிசத்துவரின் கட்டளைப் படியே செய்து முடித்தனர்.

அந்தக் கைதிகள் இரவு உணவுக்குப் பிறகு தாங்கள் அடைக்கப்பட்டிருந்த வீட்டில் ஒன்றாக உட்கார்ந்தார்கள்.

அப்போது பொற்கொல்லன் கிராமவாசி யைப் பார்த்து, ''அயோக்கியப் பயலே! என்னைப் பார்த்துச் சொல். இதற்கு முன்பு என்னை நீ எப்போதாவது சந்தித்ததுண்டா? அப்படியிருக்கும்போது நீ எப்போது என்னிடம் முத்துமாலையைக் கொடுத்தாய்?'' என்று மிகுந்த கோபத்துடன் கேட்டான்.

கிராமவாசி நாத் தழுதழுக்க, ''ஐயா, என்னை மன்னியுங்கள். எனக்கும் முத்துமாலைத் திருட் டுக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை. நான் அதைப் பார்த்ததுகூட இல்லை, அரண்மனைக் காவலாளிகள் நடத்திய கெடுபிடியைப் பார்த்து நான் பயந்து ஓடினேன். அவர்களோ என்னை அடித்து மிரட்டியதோடன்றி அரசனின் முன்னா லும் குற்றவாளியாக நிறுத்திவிட்டார்கள். நான் பரம ஏழை. அன்றாடச் சாப்பாட்டுக்கே திண்டாடிக்கொண்டிருப்பவன். அரண்மனைப் பொற்கொல்லருக்கு அரசரோடும் அரசிகளோ டும் நகைகள் செய்வது சம்பந்தமாகத் தொடர்பு இருக்கும். ஆகவே அத்தகைய அந்தஸ் திலுள்ள தங்களின் உதவியால் இந்த ஆபத்தி லிருந்து தப்பிவிடலாம் என்ற நம்பிக்கையி னால்தான் இப்படி ஓர் அப்பட்டமான பொய் யைச் சொல்லி நிலைமையைச் சமாளித்தேன். என் குற்றத்தை ஒப்புக்கொள்கிறேன். தயவு செய்து என்னைக் கோபிக்காதீர்கள்'' என்று மன்றாடினான்.

அடுத்து அரண்மனைப் புரோகிதர் பொற் கொல்லனைப் பார்த்து, ''பொற்கொல்லனே, கிராமவாசி இப்போது உண்மையைச் சொல்லி விட்டான். முத்துமாலையை அவனே திருடாத போது, நீ அதை அவனிடமிருந்து பெற்று என்னிடம் கொடுத்ததாக அரசனிடம் ஏன் கூறினாய்? நீ செய்தது மகாபாதகமான செயல்'' என்று கூறிக் கோபித்துக் கொண் டார்.

அதற்குப் பொற்கொல்லன், ''புரோகிதரே, பதற்றப்படாதீர்கள். நாம் இருவருமே அரண்மனை உத்தியோகத்தில் இருக்கிறோம். ஆகவே தங்களின் உதவியால் இந்தச் சங்கடமான நிலையைச் சமாளிக்க முடியும் என்ற நம்பிக்கையில் தான் நான் அரசரிடம் முத்துமாலையை தங்களிடம் கொடுத்ததாகக் கூறினேன். என்னை மன்னியுங்கள். இப்போது ராஜதண்டனையிலிருந்து நாம் அனைவரும் தப்புவதற்குத் தாங்கள் தாம் ஒரு யோசனை சொல்ல வேண்டும்'' என்று கூறிப் புரோகிதரைச் சமாதானப்படுத்தினான்.

ஆஸ்தான சங்கீத வித்துவான் புரோகிதரை நோக்கி, ''பிராம்மணரே, இவர்கள் சொன்னதையெல்லாம் நீங்கள் கேட்டாயிற்று. நீங்கள் எப்போது என்னிடம் முத்துமாலையைக் கொடுத்தீர்கள்?'' என்று வினவினான்.

அதற்கு புரோகிதர், ''சூழ்நிலையைப் புரிந்துகொண்ட எனக்குச் சிறைவாசம் நிச்சயம் என்பது புலப்பட்டது. சிறையில் சங்கீதமாவது கேட்டுப் பொழுது போக்கும் நோக்கத்துடன் உன்னிடம் முத்துமாலையைக் கொடுத்ததாகக் கூறினேன்'' என்று சங்கீத வித்துவானிடம் சொன்னார்.

நாட்டியக்காரி தன் கோபத்தையும் ஆத்திரத்தையும் சங்கீத வித்துவானை நோக்கித் திருப்பினாள். ''மோசக்காரச் சங்கீத வித்துவானே! படுபாவி, இதற்கு முன் நீயோ நானோ ஒருவரை ஒருவர் சந்தித்ததே கிடையாது! அப்படியிருக்கும்போது நீ எப்போது எனக்கு அந்த முத்துமாலையை அன்பளிப்பாக கொடுத்தாய்?'' என்று கேட்டுச் சீறி வெடித்தாள்.

சங்கீத வித்துவான் அவளிடம், ''அம்மா, கோபித்துக் கொள்ளாதே. அரசன் விசாரணை செய்தபோது சிறைவாசம் நிச்சயம் என்பது எனக்குப் புரிந்தது. எனது அற்ப உள்ளம், உன் தொழிலைக் கருத்தில்கொண்டு, சிறையில் உன்னுடன் மகிழ்ச்சியாக இருக்க நினைத்தது. ஆகவே முத்துமாலையை உனக்கு அன்பளிப்பாகக் கொடுத்ததாகக் கூறினேன். போனது போகட்டும், என்னை மன்னித்துவிடு, தாயே'' என்றான்.

6

மேற்கண்ட உரையாடலின் முழு விவரத்தையும் சேவகர்கள் போதிசத்துவருக்கு அறிவித்தார்கள். அதன்மூலம் அவர், 'அந்த ஐந்து பேருமே நிரபராதிகள். ஏதோ ஒரு பெண் குரங்குதான் ராணியின் முத்துமாலையை எடுத்திருக்க வேண்டும்' என்ற தமது கருத்தை உறுதிப்படுத்திக்கொண்டார்.

பிறகு அவர் குரங்கினிடமிருந்து முத்துமாலையை மீட்க ஓர் உபாயம் செய்தார். நீச்சல் குளத்தின் அருகிலிருந்து இருபத்தைந்து முப்பது குரங்குகளைப் பிடித்துவரச் செய்தார். அவற்றின் கழுத்திலும் கையிலும் முத்துமாலை போன்று தோற்றம் தரக்கூடிய பாசிமணிகளால் ஆன போலி முத்துமாலைகளைக் கட்டினர். பிறகு போதிசத்துவர் பின்தொடர, சேவகர்கள் அந்தக் குரங்குகளைக் கயிற்றால் கட்டி நீச்சல் குளத்தின் அருகில் பழையபடியே கொண்டுபோய் விட்டனர்.

இதற்கிடையில், ராணியின் முத்துமாலையைத் திருடிய பெண் குரங்கு மரத்தில் தன் பொக்கிஷத்தை ஜாக்கிரதையாகப் பாதுகாத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தது.

போதிசத்துவர் தமது சேவகர்களிடம், '' அங்கே மரங்களில் இருக்கும் எல்லாக் குரங்குகளையும் கவனியுங்கள். ராணிக்குச் சொந்தமான உண்மையான முத்துமாலையை அணிந்திருக்கும் குரங்கைக் கண்டுபிடித்து, அதைப் பயமுறுத்தி அந்த முத்துமாலையைக் கீழே போடும்படி செய்யுங்கள்'' என்றார்.

எல்லாக் குரங்குகளும் தங்களுக்குப் புதிதாகக் கிடைத்த போலி முத்துமாலைகளை அணிந்து கொண்டு மரங்களில் ஏறின. மிகுந்த மகிழ்ச்சியுடன் அவை கூடிவிளையாடியபடியே திருட்டுப் பெண் குரங்கு உட்கார்ந்திருந்த இடத்தை நெருங்கின.

அந்தக் குரங்குகள், ''இங்கே எங்களுடைய நகைகளைப் பார்த்தாயா? எவ்வளவு அழகாக இருக்கின்றன!'' என்று தங்கள் நகைகளைப் பெண் குரங்குக்குத் தொட்டுக் காட்டி எக்காள மிட்டன. உடனே பொறுமை கொண்ட பெண் குரங்கு தன் சுய அறிவை இழந்து, ''நீங்கள் அணிந்திருக்கும் மாலையில் இருப்பவை உண்மையான முத்துக்கள் அல்ல; அவை போலிதான்'' என்று கூவிக்கொண்டே, தான் மறைத்து வைத்திருந்த ராணியின் முத்துமாலையை எடுத்துக் கம்பீரமாகத் தன் கழுத்தில் அணிந்து கொண்டது.

மறு விநாடியே அந்தக் குரங்கைப் போதி சத்துவரும் சேவகர்களும் கவனித்துவிட்டனர். சேவகர்கள் அந்தக் குரங்கை மிரட்டிப் பய முறுத்தி, ராணியின் முத்துமாலையைக் கீழே போடும்படி செய்து, அந்த முத்துமாலையைப் போதிசத்துவரிடம் கொண்டுவந்து கொடுத்தனர்.

போதிசத்துவர் அரசனிடம் சென்று எல்லா விவரங்களையும் ஆதியோடந்தமாகத் தெரிவித்து முத்துமாலையையும் அவனிடம் சேர்ப்பித்தார்.

அரசன், ''நிரபராதிகளைத் தண்டனைக்குட் படுத்த இருந்த என்னைத் தக்க சமயத்தில் காப்பாற்றினீர்கள். தங்களைப் போன்ற சான்றோர்களே ஒரு நாட்டிற்கு உண்மையான செல்வமாகும். அமைச்சர் பதவி வகிப்பதற்கு முற்றிலும் தகுதி வாய்ந்த உத்தமர் நீங்கள்'' என்று போதிசத்துவரை மனமாரப் பாராட்டி அவருக்கு வெகுமதிகளும் வழங்கினான்,

போதிசத்துவரின் ஆழ்ந்தகன்ற பயன்மிக்க அறிவுரைகளுக்கிணங்க அரசன் நீண்டகாலம் தானதர்மங்களையும், நற்செயல்களையும் செய்தபடியே மக்களுக்கு எவ்விதக் குறைவுமின்றி, ராமராஜ்யமே போல் அரசாண்டான்.

---

மதி கெட்டவனே! தோல், மாம்ஸம், கொழுப்பு, எலும்பு, மலம் முதலியவற்றின் கூட்டமாகிய இந்த உடலில் நான் என்ற எண்ணத்தை விட்டு விடு. அனைத்துயிர்க்கும் ஆத்மாவாயும், பேதமற்றதாயும் இருக்கும் பிரம்மத்தினிடத்தில் ஆத்மபுத்தியைச் செலுத்துவாயாக. அதனால் உத்தமமான சாந்தியை அடைந்து அனுபவிப்பாயாக.

—விவேக சூடாமணி, 161

திருவடியே சிவம். திருவடியே சிவஞானம். திருவடியே சிவானுபூதி. யான் எனது என்னும் இருவகைப் பற்றும் அற்றுத் திருவடியாகிய சிவானந்த அனுபூதியை அனுபவிப்பவரே அடியார் என்னும் திருப்பெயருக்கு உரியவராவார். இறைவனது திருவடி போன்றே அவன் அடியார்களது திருவடிகளும் சிறந்தன.

—திருமந்திரம்

நமது கடமைகளைப் பற்றற்ற முறையில் நாம் தொடர்ந்து செய்துவர வேண்டும். பலனை எதிர்பார்த்த வண்ணம் நாம் எதுவும் செய்யக்கூடாது. சுருங்கக் கூறுவதானால், எந்த நடவடிக்கையும் கடவுளுக்கு அர்ப்பணம் செய்யப்பட வேண்டும். நாமே எதையும் செய்கிறோம், எதையும் செய்ய முடியும் என்ற இறுமாப்பு நம் கனவில்கூட ஏற்படக் கூடாது; எல்லோரையும் நாம் சமமாகக் கருத வேண்டும்.

கடப்பதற்குக் கஷ்டமான பாதைகளைக் கடந்து செல்ல வேண்டும். கோபத்தைச் சாந்தத்தினாலும், பொய்யைச் சத்தியத்தினாலும் வெற்றிபெற வேண்டும்,

—சாம வேதம், ஆரண்ய காண்டம், அர்க்க பருவம்.

# சுவாமி பிரேமானந்தரின் போதனைகள்

ஆசிரமத்தில் சகோதரர்களுக்கிடையே மனஸ்தாபம் ஏதோ ஏற்பட்டிருப்பதாக நீ கூறியிருக்கிறாய். அது சாமதானமாகி விடும். உள்ளத்தில் கெட்ட எண்ணம் இல்லாவிட்டால் எதற்குக் அஞ்ச வேண்டியதில்லை. எல்லா நிலைகளிலும் சத்தியத்தைக் கெட்டியாகப் பிடித்துக்கொள். 'ஸத்யமேவ ஜயதே நாந்ருதம்-சத்தியமே வெல்லும், பொய் வெல்லாது. எவருக்கும் தீங்கு நினைக்காமல் உண்மையையே கடைப்பிடித்தால் ஸ்ரீராமகிருஷ்ணர் உலக மக்களுக்குப் பணியாற்ற உனக்கு அளவற்ற பலத்தைக் கொடுப்பார் என்பதை உணர்வாயாக.

[ஓர் இல்லறத்தானுக்கு] இன்னும் அதிகமான வருவாய் தரக்கூடிய வேலையை நீ கண்டு பிடிக்க வேண்டும். உலக வாழ்க்கையைப் பற்றிக் கொண்டிருக்கும் வரையில் உனக்குப் பணம் வேண்டும். ஆனால் அந்தப் பணத்தை நேர்மையான வழியில் சம்பாதிக்க வேண்டும்-அது நன்மை தரும். தவறான வழியில் ஒரு போதும் இறங்கிவிடாதே. நேர்மையிலிருந்து விலகுவதுதான் எல்லாத் துரதிர்ஷ்டத்திற்கும் துன்பத்திற்கும் மூலகாரணம்.

சுய நலத்திலேயே நாட்டம் கொள்ளாதே. ஆசைகளைத் துறப்பதற்கு முயற்சி செய். எல்லா நன்மைகளையும் அளிக்கும் ஆண்டவனைச் சரணாக அடை. அப்படிச் செய்தால் உன் பயம் நீங்கிப் போகும். அப்போது பெரிய கடல் போன்ற உலகம் களிமண்ணில் குளம்படியில் தங்கும் நீர்போல் ஆகிவிடும். உதட்டையும் உள்ளத்தையும் ஒன்றாக்கி இஷ்ட தெய்வத்திடம் ஆர்வத்துடன் பிரார்த்தனை செய். அச்சமெல்லாம் பறந்துபோகும். உள்ளத்தில் ஆனந்தம் பொங்கியெழும். இதயத்தில் அமைதி நிலவும். ஆனந்தத்திற்கு மூலம் ஆண்டவனுடைய திருநாமம்.

அவனைப் பற்றிக்கொள். எதற்கும் அஞ்சாதே. அவர்தாம் வாழ்க்கையை நடத்துபவர்; நாம் அவர் கையில் கருவிகள். அவர்தாம் யஜமானன்; நாம் அவரை விட்டு என்றும் விலகாத பணியாட்கள்.

தூய்மையும் உண்மையில் பற்றும் ஒரு மனிதனைத் தெய்வமாக்கும் என்பதை எப்போதும் நினைவில் வைத்துக் கொள்.

[ஒரு துறவிக்கு] அனைத்தையும் துறந்தவர்களுக்கு ஒரு குறைவுமில்லை. நம்முடைய இதயம் விசாலமாக இருக்க வேண்டும். இதயமும் மனமும் மேலே தேவலோகத்திலுள்ளவர்களையும், வெகு கீழே பாதாளத்திலுள்ளவர்களையும், எல்லா உயிர்களையும் அன்புடன் தழுவ வேண்டும். ''பெயரையும் புகழையும் துப்பிவிடு.'' இப்படித்தான் ஸ்ரீராமகிருஷ்ணர் எங்களுக்கு உபதேசித்தார்.

உலகபோகங்களில் பற்று வைத்து அதுவே எல்லாம் என்று வாழ்பவர்கள் இருக்கிறார்கள். அவர்கள் பணத்திலும் பெயரிலும் புகழிலும் பித்தேறியவர்கள். அவர்களுக்குத் தெய்வ நம்பிக்கை இல்லை. அவர்கள் தெய்வத்தை வழிபட மாட்டார்கள். அது மட்டுமின்றி ஒவ்வொருவரையும் தங்களுடைய நிலைக்குத் தாழ்த்தவே அவர்கள் விரும்புவார்கள்.

பொறுமையைக் கைக் கொள்ளவேண்டும், ஆசையைத்தள்ள வேண்டும் என்று ஸ்ரீராமகிருஷ்ணர் எங்களுக்கு உபதேசித்தார். 'பொறுமையுள்ளவன் என்றும் நிலைத்திருப்பான்,

பொறுமையில்லாதவன் அழிந்துபோவான்' என்று அவர் கூறுவார். ஆகையால் பொறுமையுடன் இரு; ஆசையை விடு. அளவு கடந்த பொறுமையைக் கைக்கொள். உலகில் வாழ்வாங்கு வாழ்வதற்கு நாம் இந்த இரண்டு குணங்களையும் பயிலவேண்டியது அவசியம் -பொறுமை, பற்றின்மை.

உனது மனதை ஸ்ரீராமகிருஷ்ணருக்குக் கொடு. அவர் கருணைக் கடல். அவர் உன்னை எக்காலத்தும் எல்லா நிலைகளிலும் காப்பார்.

அன்பே சிவம். அவரிடம் சரண்புகுந்தவர்களை அவர் ரக்ஷிப்பார் என்ற திடமான நம்பிக்கையும் நிச்சயபுத்தியும் இருக்க வேண்டும். உள்ளக் கோயிலில் ரகசியமாக அவரை வழிபடு. அவர் உனக்குப் பலமளிப்பார், நல்லபுத்தியைக் கொடுப்பார்.

உண்மையைக் கடைப்பிடி. உள்ளத்தையும் உதட்டையும் ஒன்றுகச் செய்வதே உண்மையைக் கடைப்பிடிப்பதாகும். உண்மையை விடாமல் பிடித்துக் கொண்டால் நீ எல்லாவற்றையும் சாதித்தவனுவாய். ஆண்டவன் உனக்குள் அருள் புரியட்டும்.

முறைப்படி பூஜையை உபதேசம் பெற்ற எவரும் செய்யலாம். உபதேசம் பெற்றவனுடைய உடல் பரிசுத்தமானது. பகவானிடம் பக்தி நிறைந்த உள்ளத்துடன் பூஜையைச் செய். பூஜையைச் செய்யச் செய்ய, மனதில் ஒருமைப்பாடு வளரும். தியானம் கைகூடும்.

உள்ளன்புடன் பூஜையைச் செய்தால் சாஸ்திரங்கள் விதிக்கும் நெறிகள் அனைத்தையும் பகிரங்கமாக அனுஷ்டிக்க வேண்டியதில்லை. சிரத்தையும் பக்தியும்தான் முக்கியம்.

எல்லோருடனும் சமமாகப் பழகு. அன்புடனும் ஒற்றுமையுடனும் வாழக் கற்றுக்கொள். எல்லோருடனும் பழகினுலும் உன் இலட்சியத்தை மறக்காமல் இருக்க வேண்டும். இலட்சியத்தைத் திடமாகப் பற்றிக்கொள்.

தெய்வபக்தி உடையவர்தான் நம் உயிருக்கு உயிர் போன்றவர். அப்படிப்பட்டவர்தான் நமக்கு நெருங்கிய உறவினர். தெய்வபக்தியுள்ள அடியார்கள் இல்லாமற்போனுல் இந்த உலகம் இருள்மூடிப்போகும்.

நீ ஒரு பக்தன். பகவான் உன்னைக் காப்பாற்றியிருக்கிறார். இனியும் காப்பாற்றுவார். உனக்கு அஞ்சுவதற்கு எதுவுமில்லை; உன் ஆன்ம வாழ்க்கையில் நீ படிப்படியாக உயர, பகவான் அருள் புரியட்டும். மேலே மேலே போ. ஆனந்தம் உன்னிடம் குடிகொள்ளும்.

[ஓர் இல்லறத்தானுக்கு] தெய்வபக்தி உள்ளவர்கள்தாம் எங்களுக்கு உற்றார், உறவினர், குழந்தைகள் அனைத்தும். இன்பத்திலும் துன்பத்திலும் நீங்கள் எங்களுக்கும் மிகவும் நெருங்கியவர்கள். உலகவாழ்க்கையில் இருந்தாலும் நீங்கள் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் தூய்மையான அன்பு செலுத்துவது பெரிய அதிசயம். சாதாரண மக்களைப் பாருங்கள். பித்துப்பிடித்தவர்களைப் போல் அலைகிறார்கள்; பணம், புகழ், படிப்பின் கர்வம் எல்லாம் தலைக்கேறியிருக்கின்றன. பாலைவனம் போன்ற இந்த உலகில் அமைதிக்கும் ஆனந்தத்திற்கும் உறைவிடம் பகவான் ஒருவர்தாம். உங்களுக்கு பயம் ஏதுமில்லை. தூண் போன்ற பகவானை நீங்கள் கெட்டியாகப் பற்றிக்கொண்டிருக்கிறீர்கள். உங்களுடைய குறிக்கோள் திடமாக இருக்கிறது. உங்களைப் பார்த்து இன்னும் பலர் நல்வழியைப் பின்பற்றுவார்கள்.

பக்தர்களே! முன்மாதிரியான வாழ்க்கையை நடத்துங்கள். ஆண்டவனிடம் அன்பு செலுத்துவதைவிட வேறு எதிலும் ஆசை வையாமல், சுயநலமற்ற தூய்மையான வாழ்க்கை நடத்துவதைப் பிறர் உங்களைப் பார்த்துக் கற்றுக் கொள்ளட்டும். ஆண்டவனை நேசித்து அதன் மூலம் அமைதியும் வலிமையும் அடையலாம் என்பதை நிரூபித்துக்காட்டும் மக்களையுடைய புதிய யுகத்தைக் கொண்டுவாருங்கள். உங்கள் செயல் பேசட்டும். வார்த்தைகளும் வாதங்

களுமன்று. ஆண்டவன் உங்களுக்குப் பலத்தைக் கொடுத்து உதவட்டும். அவரைத் திடமாக நம்புங்கள். அவர் நம்முடையவர், நாம் அவருக்கு உரியவர்கள்.

கர்வம், செருக்கு, அகங்காரம் ஆகிய எதுவும் உண்மையான அடியார்களை நெருங்காது. ஸ்ரீராமகிருஷ்ணர் கூறுவார்: ''பக்தர்கள் ஒரு தனி வகுப்பைச் சேர்ந்தவர்கள். அவர்கள் பிராமணர்களுமல்லர், சூத்திரர்களுமல்லர், இந்துக்களுமல்லர், முஸ்லிம்களுமல்லர்.'' அவர்கள் புகுந்த குலம் பகவத்குலம்; அவர்கள் ஆண்டவனுடைய உறவினர்கள்; அவனுக்கே சொந்தமானவர்கள். அவர்கள் ஆண்டவனுடைய அருளையன்றி வேறு எதிலும் நாட்டமில்லாதவர்கள்.

[ஒரு மாணவனுக்கு] நீ எங்கே வசிக்கிறாய் என்பது முக்கியமன்று; வாழ்க்கையின் இலட்சியத்தை மட்டும் மறந்து விடாதே. உனக்கு சத்துவகுணம் பிறவியிலேயே வாய்த்திருக்கிறது என்பதை நம்பு. ஆனால் அதற்குரிய காலம் வந்தாலன்றி ஒரு மரம் பழுப்பதில்லை. இப்போது உலகில் பொறாமை, அசூயை, பகைமை எல்லாம் நிறைந்திருக்கின்றன. ஆனால் விரைவில் ஒரு பெரிய அன்பு வெள்ளம் வரும். சுயநலம் அனைத்தையும் அது அடித்துக் கொண்டு போய்விடும்.

[ஒரு சாதகனுக்கு] உலக மக்கள் எது நல்லதென்று தாங்கள் கருதுகிறார்களோ அதைப் பின்பற்றும்படி புத்திமதி கூறுவார்கள். ஆனால் நன்கு ஆராய்ந்து உன் குறிக்கோளை நோக்கி அழைத்துச் செல்லக்கூடியதும், உனக்கு உயர் நலம் தரக்கூடியதும் எந்த வழியோ அந்த வழியை நீ பின்பற்ற வேண்டும். சிறந்த வழி தெய்விகவாழ்க்கை வாழ்ந்தவர்கள் சென்ற வழியேயாகும்.

ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உபதேசங்களையும் சுவாமி விவேகானந்தரின் அறிவுரைகளையும் படி. படித்ததைப் புரிந்துகொள்ள முயன்று அதன்படி வாழ்க்கையை உருவாக்கிக்கொள்.

துறவு மார்க்கத்தைக் கைக்கொள்ள நீ விரும்புகிறாய். உன் உறவினர் அதை விரும்பாதது இயற்கை. உன்னை அதிலிருந்து திருப்ப முயல்வார்கள். என்றாலும் நீ அவர்களிடம் கோபித்துக்கொள்ளவோ கடுமையாகப் பேசவோ கூடாது. நீ புனித வாழ்க்கையை மேற்கொள்ள விரும்பினால் பொறுமையையும் அமைதியையும் திடமாகப் பற்றிக்கொள்ள வேண்டும். அளவு கடந்த பொறுமை, அளவு கடந்த அமைதி, மன்னிக்கும் இயல்பு-இவை தாம் சாந்தியையும் சந்தோஷத்தையும் அளிப்பனவாகும்.

நீ வாலிபன். உன்னுடைய மனோவேகம் அதிகமாக இருப்பது இயற்கை. உலக இன்பங்களை அனுபவிக்க ஆசைகள் எழவே செய்யும். நீ மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். நீ ஆண்டவனுடைய பணியாள், அவருடைய பலம் உனக்குப்பின் இருக்கிறது என்பதை நினைத்துக்கொள். காமம் உன்னை எப்படி வெல்ல முடியும்? நீ திடசித்தமுடையவனாகவும் வீரனாகவும் இருந்துகொண்டு அதே சமயத்தில் இளகிய மனமும் அமைதியும் உடையவனாகவும் இருக்க வேண்டும். ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் பக்தி இருந்தால் உனக்குப் பயமில்லை. கஷ்டங்களும் ஆபத்துக்களும் வந்தாலும் உன்னை அசைக்க முடியாது. இந்த உண்மையை நீ அனுபவத்தில் காண்பாய். ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய நாம ஜபத்தால் நீ புதியதொரு பிறவியை அடைந்தவனாவாய். அவருடைய திருநாமம் மனிதனைத் தெய்வமாக்கும்.

அடியார்கள் ஒருவருக்கொருவர் பகவானைப் பற்றிய விஷயங்களைப் பேச வேண்டும். அடியார்களிடம் நமக்கு அன்பு இல்லாவிட்டால் நமது வாழ்க்கை வீணாகப்போகும். அடியார்கள் நம்முடைய சொந்தம்-ஜாதி, குலம் முதலிய எண்ணமே இருக்கக்கூடாது-ஏனென்றால் அவர்களிடம் அவை இல்லை. அடியார்களிடம் வைக்கும் பற்று, பற்றாகாது; அது பந்தத்தை விளைக்காது. நீ கிறிஸ்தவரின் கோயிலுக்குப் போனாலும் இந்துக்களின் கோயிலுக்குப் போனாலும் அங்கே உன் இஷ்ட தெய்வத்

தையே பார். எங்கெங்கே பார்த்தாலும் அங்கங்கே இருப்பது உன் மனதில் குடிகொண்டுள்ள தெய்வமே ஆகும். உன் லட்சியத்தில் பற்றுக்கோடு என்பதன் கருத்து இதுவே.

பகவானைத் தியானிப்பதிலும் அவருடைய திருநாமத்தை ஜபிப்பதிலும் அடிக்கடி எவ்வளவு காலம் முடியுமோ அவ்வளவு செலவிட வேண்டும். அதே இயல்புடையவர்களுடன் உரையாடவும் வேண்டும். ஒவ்வொருவருக்கும் இது பெரிய உதவியாகும்.

கல்லூரியில் தொடர்ந்து படித்து வா. உலக இயல்பு உன்னை விழுங்கி விடுமோ என்று அஞ்சாதே. உன் மனதையும் இதயத்தையும் எப்போதும் தூய்மையாக வைத்துக் கொண்டிரு.

உனக்கு எது தேவை என்று தோன்றினாலும் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் பிரார்த்தனை செய். அவர் எல்லோருடைய இதயத்திலும் இருந்து கொண்டு எல்லோருடைய வேண்டுகோளுக்கும் செவி சாய்க்கிறார்.

கபடமில்லாமலிரு. உன் உள்ளமும் உதடும் ஒன்றாக இருக்கட்டும்.

[தான் செய்த தவறுதலுக்கு வருந்தும் ஒருவனுக்கு] ஆண்டவன் ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் உறைகிறார். எல்லோருடைய அந்தரங்கமான எண்ணங்களும் அவருக்குத் தெரியும். முழுமனதுடன் அவரிடம் பிரார்த்தனை செய்து அழு. அவர் ஒருவர்தான் உன் மனதை திருத்தி நல்வழியில் செலுத்த முடியும் அந்த நல்ல வழியைப் பின்பற்றி நடப்பதற்கு வேண்டிய சக்தியையும் அவரே கொடுப்பார். நேர்மையான வழியையே பின்பற்றுவதென்று திடமாக விரதம் செய்துகொள். ஆண்டவனுடைய கருணையால் அதை நீ செய்ய முடியும்; ஆனால் இரவும் பகலும் பிரார்த்தனை செய்து மனமுருகி அவர் முன்னிலையில் அழு. உனக்குச் சக்தி வரும், பக்தி வரும். அவர் கருணைக் கடல், அவர் இறங்கி அருள் புரிபவர். அவர் மன்னிக்கும் இயல்பே உருவாகியவர்.

அவர் முன் கள்ளங்கவடில்லாமல் இருக்க வேண்டும்; பாசாங்கும் போலிபக்தியும் பயன் படமாட்டா. ★

## இரவு எப்படி உண்டாயிற்று?

முதன்முதலில் இரவு எப்படி உண்டாயிற்று? இதை மைத்ராயணி சம்ஹிதை பின்வருமாறு கூறுகிறது:—

அந்தக் காலத்தில் எப்பொழுதும் பகலாகவே இருந்தது. இருளும் இரவும் எப்படி இருக்கும் என்பது யாருக்குமே தெரியாமல் இருந்தது. ஒரு நாள் யமன் செத்துப்போனான். அவனுடைய பிரிவைத் தாங்காத யமனின் மனைவி யமி ஓயாமல் புலம்பிக்கொண்டே இருந்தாள். தேவர்கள் அவளுக்கு எவ்வளவோ ஆறுதல் கூறியும் கணவனை அவளால் மறக்க முடியவில்லை. அவளது துயரம் கணந்தோறும் பசுமையாக இருந்தது. தொடர்ந்து பகலாக இருந்ததனால் யமிக்கு நாள் கணக்கே தெரியவில்லை. 'இன்றைக்குத்தான் அவர் இறந்தார்' என்று சொல்லிக் கொண்டே புலம்பினாள். அவளுடைய பரிதாபக் கதறலைக் கண்டு தேவர்கள் மனமுருகித் தவித்தார்கள். ஒன்றுகூடி ஆலோசித்து இருளை உண்டாக்குவது என்ற முடிவோடு இரவைப் படைத்தார்கள். மறுநாள் பொழுது விடிந்தது. யமியின் துயரம் சிறிது குறைந்தது. இரவின் மென்மையான ஸ்பரிசத்தில் அவள், கணவனின் பிரிவை ஓரளவு பொறுத்துக்கொண்டாள்.

—மைத்ராணி சம்ஹிதை

# அன்னை ஸ்ரீ சாரதாதேவியார்

சுவாமி தபஸ்யானந்தர்

ஸ்ரீசாரதாதேவியாரின் தந்தையின் பெயர் ராமசந்திர முகர்ஜி என்பதாகும். அவருடைய குடும்பம் ஏழ்மை நிலையில் இருந்து வந்தது. எனினும் அவர் பிராம்மண தர்மத்திற்கே எடுத்துக்காட்டாகப் பரிபூரண நல்லொழுக்கத் துடனும் நேர்மையுடனும் போதுமென்ற உள்ளத்துடனும் வாழ்ந்து வந்தார்.

ஸ்ரீ அன்னையார் பிற்காலத்தில் தமது தந்தையைப் பற்றி பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்:- ''அவர் மிகவும் நல்லவர். ஸ்ரீராமபிரானிடம் எல்லையற்ற பக்தி பூண்டவர். பிராம்மண தர்மத்திற் உரிய ஆசார அனுஷ்டானங்களிலிருந்து ஒரு சிறிதும் வழுவாதவர். ஒழுக்கம் இல்லாதவர்களிடமிருந்து அவர் எதையும் தானமாக பெற்றுக்கொள்ளமாட்டார். புகை பிடிப்பதில் அவருக்கு விருப்பம் உண்டு. கபடமற்ற எளிய சுபாவம் கொண்டிருந்ததனால் தாம் புகை பிடிக்கும்போது தமது வீட்டைத் தாண்டி போகிறவர் வருகிறவர் ஒவ்வொருவரையும் அன்புடன் அழைத்து, 'சகோதரரே உள்ளே வந்து புகை பிடித்து விட்டுச் செல்லுங்கள்' என்று சொல்வார்.''

1864-ஆம் ஆண்டில் வங்காளத்தில் கடும் பஞ்சம் ஏற்பட்டது. அப்போது நடைபெற்ற ஒரு நிகழ்ச்சியை ராமசந்திர முகர்ஜியின் நற்குணத்திற்கும் தாராள மனப்பான்மைக்கும் உதாரணமாகச் சொல்லலாம்.

ராமசந்திரரோ ஏழை. சில ஏக்கர் நிலத்தில் நெற்சாகுபடி செய்வதன் மூலமும், பூசாரித் தொழிலின் மூலமும், பூணூல் செய்து விற்பதன் மூலமும் கிடைத்த குறைந்த வருவாயில் அவர் வாழ்ந்து வந்தார். எனினும், பஞ்சம் தோன்றுவதற்கு முந்திய ஆண்டு விளைச்சலில் மிகுந்திருந்த நெல் அப்போது அவர் கைவசம் இருந்தது. தமது வறுமை நிலையையும் சிறிதும் பொருட்படுத்தாமல் கைவசம் இருந்த நெல் முழுவதையும் அவர் பஞ்சத்தில் வாடிய மக்களுக்கு உணவளிப்பதிலேயே செலவிட்டார்.

இந்தப் பஞ்சம் ஏற்பட்டபோது ஸ்ரீசாரதா தேவியாருக்கு வயது பதினொன்று நடந்து கொண்டிருந்தது. அந்தச் சிறிய வயதில் நடைபெற்ற நிகழ்ச்சிகள் அவரது உள்ளத்தில் ஆழமாகவும் அழுத்தமாகவும் பதிந்திருந்தன. ஸ்ரீசாரதாதேவியார் பிற்காலத்தில் அந்தப் பஞ்சத்தை நினைவுகூர்ந்து தமது சீடர்களிடம் பின்வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்:-

,,ஒரு சமயம் ஜயராம்பாடியில் கடும் பஞ்சம் ஏற்பட்டுப் பெரிதும் நாசம் விளைவித்தது. எண்ணற்ற மக்கள் உணவுக்காக அப்போது எங்கள் வீட்டிற்கு வருவார்கள். முந்திய வருட விளைச்சலில் சேமித்து வைத்திருந்த அரிசி எங்களிடம் இருந்தது. அந்த அரிசியையும் பருப்பையும் சேர்த்துச் சமைத்து என் தந்தை 'கிச்சிடி' தயார் செய்வார். பல பானைகளில் நாங்கள் கிச்சிடி தயார்செய்து வைத்திருப்பது வழக்கம். எங்கள் குடும்பத்தில் உள்ளவர் அனைவரும் அந்தக் கிச்சிடியையே சாப்பிடுவார்கள். 'என் மகள் சாரதாவுக்கு மட்டும் நல்ல ரக அரிசியைச் சமையுங்கள். அவள் அதைச் சாப்பிடட்டும்' என்று என் தந்தை சொல்வார். சில சமயங்களில் பசியால் வருந்தும் மக்கள் ஏராளமாக வந்துவிடுவார்கள். வீட்டில் சமைத்து வைத்திருந்த உணவு அவர்களுக்குப் போதாமல் போய்விடும். அப்போது மறுபடியும் கிச்சிடி தயார் செய்து, சுடச்சுடப் பெரிய பானைகளில் 'கொட்டுவார்கள். அந்தச் சூடு ஆறுவதற்காக நான் விசிறியால் விசிறுவேன். பசியால் வாடும் மக்கள் அதற்காகக் காத்திருப்பார்கள்.

ஒரு ''நாள் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த ஒரு பெண் அங்கு வந்தாள். அவள் ஒரு பைத்தியக்காரியைப் போல பரட்டைத் தலையுடனும் கண்கள் சிவந்தும் காணப்பட்டாள். ஒரு தொட்டியில் மாடுகளுக்காக ஊற வைத்திருந்த தவிட்டைக் கண்டதும் அதை அவள் சாப்பிடத் தொடங்கிவிட்டாள். 'வீட்டில் கிச்சிடி

இருக்கிறது; போய்ச் சாப்பிடு' என்று நாங்கள் சொல்லியும், அந்தச் சிறிது நேரத்திற்குங்கூட அவளால் பொறுமையுடன் காத்திருக்க முடிய வில்லை. பசியின் கொடுமையைத் தாங்கிக் கொள்வது என்பது வேடிக்கையா, என்ன?''

★ ★ ★

ஸ்ரீசாரதாதேவியின் தாயின் பெயர் சியாம சுந்தரி என்பதாகும். அவர் சிறந்த குடும்பப் பெண்ணாகவும் தம் கணவரின் குணநலன் களுக்கு எல்லா விதத்திலும் முற்றும் தகுதி வாய்ந்தவராகவும் விளங்கினர். ஸ்ரீசாரதா தேவியார், ''அவர் எளிமையானவர். சூது வாது தெரியாதவர். தயை உடையவர்'' என்று சியாமசுந்தரி தேவியைப்பற்றிக் குறிப் பிட்டிருக்கிறூர்.



தெய்வ பக்தி நிரம்பிய மக்களுக்கு உணவு அளிப்பது, அவர்களின் நன்மையின் பொருட்டு உழைப்பது - ஆகியவற்றில் மகிழ்ச்சி காண்பது சியாமசுந்தரியின் இயல்பு ஆகும். பிற்காலத்தில் அவரது மகளை அதாவது அன்னை ஸ்ரீ சாரதா தேவியாரைச் சுற்றியிருந்த பக்தர்களின் எண் ணிக்கை அதிகரித்தது. அப்போது அந்தப் பக்தர் களை அன்புடன் வரவேற்று அவர்களிடம் அன்பு பாராட்டுவது சியாமசுந்தரி தேவியின் வழக்கம்.

''யாராவது பக்தர்கள் எங்கள் வீட்டிற்கு வந் தால் என் தாயின் மகிழ்ச்சிக்கு ஓர் அளவே இருக்காது. 'ஆஹா! என் பேரக்குழந்தை வந் திருக்கிறுனே!, என்று அவர் கூவுவார். வரும் பக்தர்களை மிகுந்த பரிவுடன் கவனித்துக் கொள் வார். இந்தப் பக்தர்கள் அனைவரையும் தமது சொந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவர்களாகவே அவர் பாவித்து வந்தார்'' என்று ஸ்ரீ அன்னை யார் கூறியுள்ளார்.

★ ★ ★

ஜயராம்பாடியின் கிராமச் சூழ்நிலையில் பிறந்து வளர்ந்த சாரதாதேவிக்கு, கிராமங்களைச் சேர்ந்த ஏழைப் பெண்களுக்கு அளிக்கப்படும் பயிற்சிகளே இளமையில் அளிக்கப்பட்டன. சிறிய வயது முதற்கொண்டே ஸ்ரீசாரதாதேவி யார் தமது அன்னைக்குச் சமையல் வேலைகளில் உதவிசெய்வார். தவிர்க்க இயலாத காரணங் களை முன்னிட்டு, சியாம சுந்தரியால் சமையலைக் கவனிக்க முடியாதபோது, சமையலறையின் முழுப் பொறுப்பையும் சாரதாவே ஏற்றுக் கொள் வார். இத்தகைய தமது இளமைப்பருவத்து அனுபவங்களைப்பற்றிப் பிற்காலத்தில் தூய அன்னையார், ''நான் சமையல் செய்தேன். அப்போது பெரிய சோற்றுப்பானையை அடுப் பிலிருந்து இறக்க என் தந்தை எனக்கு உதவி செய்தார்'' என்று கூறியுள்ளார்.

அவர் இளமைப் பருவத்தில் செய்து வந்த மற்ற வேலைகளைப்பற்றிச் சொல்லும்போது, ''சிறிய வயதில் சில சமயங்களில் நான் கழுத் தளவு நீரில் இறங்கி மாடுகளுக்குப் புல் அறுத்து வருவேன். வயலில் வேலை செய்யும் பணியாட் களுக்கு உணவு எடுத்துச் செல்வேன். ஒரு சமயம் பூச்சிகள் நெற்கதிரை நாசம் செய்தன. அப்போது ஒவ்வொரு வயலாகச் சென்று தானி யங்களைச் சேகரித்து வரும்படி நேர்ந்தது'' என்றுர்.

இளமையிலேயே தன்னடக்கமும் ஆழ்ந்த சிந்தனையும் ஸ்ரீசாரதாதேவியிடம் குடிகொண் டிருந்தன. அது காரணமாக அவர் தமது வயதையொத்த மற்றச் சிறுமிகளைப் போல, சிறுபிள்ளைத்தனமான விளையாட்டுக்களில் ஈடு பட்டதில்லை. சிறுவயதில் சாராதேவியுடன் கூடி விளையாடிய தோழிகளில் ஒருத்தியின் பெயர் அகோர்மணி என்பதாகும். அந்த

அம்மையார் தூய அன்னையாரைப்பற்றிப் பின் வருமாறு கூறியுள்ளார் :-

''ஸ்ரீஅன்னையார் மிகவும் எளிய பழக்க வழக்கங்களைக் கொண்டிருந்தார்; விளையாட்டின்போது அவர் ஒருவருடனும் சண்டை போட மாட்டார். மற்றச் சிறுமிகள் சண்டையிட்டாலும் நடுநிலைமை வகித்துச் சமாதானப் படுத்தி அவர்களுக்கிடையில் நட்பு நிலவும்படி செய்வார். விளையாடும்போது அவர் தம்மைக் குடும்பத்தின் தலைவியாகவோ செவிலித் தாயாகவோ பாவித்துக்கொள்வார். அவருடைய விளையாட்டுச் சாமான்களில் சில பொம்மைகள் இருந்தன. அவற்றில் காளி, லக்ஷ்மி பொம்மைகளையே அன்னையார் பெரிதும் விரும்பினர் அந்தப் பொம்மைகளுக்குப் பூவும் வில்வதளங்களும் கொண்டு பக்தியுடன் அர்ச்சனை செய்து வழிபடுவார். ஒரு சமயம் ஜகதாத்ரி பூஜையின்போது ஒருமுகப்பட்ட மனதுடன் ஜகன்மாதாவைத் தியானித்து அவர் அம்பிகையுடனேயே ஐக்கியமாகியிருந்த நிலையைப் பார்த்து, ஹால்தார்புகுரைச் சேர்ந்த ராம்ஹ்ருதய் கோஷால் மூச்சுப் பேச்சற்று வியப்புடன் நின்று விட்டார்.''

தமது இளைய சகோதரர்களைக் கவனித்துக் கொள்வதிலேயே சாரதாவின் பெரும்பொழுது கழிந்தது. சில சமயங்களில் சகோதரர்களுடன் அவரும் கிராமத்திலிருந்த பள்ளிக்கூடத்திற்குச் செல்வார்.

அந்நாளில் பொதுவாகப் பெண்களுக்கு, அதிலும் குறிப்பாகக் கிராமப் பெண்களுக்குக் கல்வியறிவு தேவை என்று கருதப்படவில்லை. ஆகவே சாரதாவுக்குக் கல்வி கற்பிக்கவோ அல்லது அவர் தவறாமல் பள்ளிக்கூடம் போகிறாரா என்பதைப் பார்த்துக் கவனித்துக்கொள்ளவோ யாரும் அக்கறை எடுத்துக் கொள்ளவில்லை.

படிக்க வேண்டும் என்ற ஆர்வம் காரணமாகவே பிற்காலத்தில் ஸ்ரீஅன்னையார் தாமே தமது சொந்த முயற்சியால் படிக்கக் கற்றுக் கொண்டார். இதைப்பற்றி ஸ்ரீ அன்னையாரே பின்வருமாறு கூறியுள்ளார் ''காமார்புகுரில் லக்ஷ்மியும் (ஸ்ரீராமகிருஷ்ணரின் மருமகள்) நானும்'வங்காளி முதல் பாடப் புத்தகத்தைச் சிறிது நேரம் படிப்பது வழக்கம். என் மருமகன் ஹ்ருதய் என்னிடமிருந்து அந்தப் புத்தகத்தைப் பறித்துக் கொண்டு ஓடுவான். 'பெண்கள் எழுதவோ படிக்கவோ கூடாது. பின்னால் நாவல்களையும் நாடகங்களையும் படிக்கலாம் என்ற எண்ணத்தில் இவ்விதம் இப்போதே உன்னை நீ தயார் செய்து கொள்கிறாயா'? என்று சத்தம் போடுவான். லக்ஷ்மி புத்தகத்தைக் கொடுக்கமாட்டாள். அவள் அந்த வீட்டைச் சேர்ந்தவளாதலால் புத்தகத்தை இறுக்கமாகப் பற்றிப் பிடித்துக்கொள்வாள். பிறகு நானும் ஓர் அணாக் கொடுத்து இரகசியமாக ஒரு புத்தகம் வாங்கினேன். லக்ஷ்மி கிராமத்துப் பள்ளிக்கூடத்திற்குப் போய் வருவாள். வீட்டிற்கு வந்ததும் எனக்குக் கற்றுக் கொடுப்பாள். ஆனால் பல ஆண்டுகளுக்குப் பிறகு தட்சிணேசுவரத்தில்தான் நான் படிக்கும் திறமையை வளர்த்துக் கொண்டேன். அந்தச் சமயத்தில் குருதேவர் (ஸ்ரீராமகிருஷ்ணர்) மருத்துவச் சிகிச்சைக்காக சியாம்புகுரில் தங்கியிருந்தார். நான் தனியாக இருந்தேன். பாவமுகர்ஜியின் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு பெண் கங்கையில் நீராடுவதற்காக அப்போதெல்லாம் கோவில் தோட்டத்திற்கு வருவது வழக்கம். அவ்வப்போது அவள் என்னுடன் நீண்டநேரத்தைக் கழிப்பாள். எனக்குப் பாடங்கள் கற்றுக் கொடுத்துப் பிறகு என்னை அந்தப் பாடங்களில் பரிசோதித்தும் பார்ப்பாள். அதற்குப் பதிலாகக் கோவில் தோட்டத்திலிருந்து எனக்கு அனுப்பப் படும் கீரை, காய்கறிகள், மற்றும் உணவுப் பதார்த்தங்கள் முதலியவற்றை நான் அவளுக்கு நிறைய அளிப்பேன்.''

அன்னையார் படிப்பதற்கு நன்றாக் கற்றுக் கொண்டிருந்தார். எனினும் எழுதக்கூடிய திறமையை அவர் முழுமையாகப் பெறவில்லை. பிற்காலத்தில் ஒரு சீடர் அன்னையிடம் கையெழுத்து வேண்டும் என்று கேட்டார். அப்போது அன்னையும் சீடரின் கோரிக்கைக்கு ஒருவாறு சம்மதித்துத் தமது பெயரை எழுதுவதற்குத் தம்மால் இயன்ற வரையில் முயற்சி செய்தார். ஆனால் அது வெறும் கிறுக்கலாகப் போகவே முயற்சியை அத்துடன் கைவிடும்படி ஆயிற்று. ★

# பெண்மை தந்த தாய்மை

ரா. கணபதி

ரமணர் முருகனின் அவதாரமாகவே மதிக்கப் பெறுபவர். சம்ஸ்கிருதத்தில் பெருங்கவியா யிருந்தது மட்டுமின்றி மஹா மந்திரஸித்த ராகவுமிருந்த காவ்யகண்ட கணபதி முனி கண்ட அநுபவம் இதுவே. அம்பாளின் திரு வடியில் அமர்ந்திருந்த குமாரஸ்வாமியை, ''இங்கே வாடா குழந்தே!'' என்று ஈச்வரன் கை நீட்டி அழைக்க, பால ஸ்கந்தன் எழுந்து வந்து தந்தையால் ஆரத் தழுவப்பட்டதை ஆதிசங்கரர் ''ஸுப்ரஹ்மண்ய புஜங்க''த்தில் 'இஹாயாஹி வத்ஸ' என்ற ச்லோகத்தில் சித்திரிக்கிருர். அருணுசலேசன் இப்படி ரமணரை அழைக்கவே அவர் மதுரை மீன லோசனியின் திருவடியை விட்டு ஓடிவந்த தாகக் காவியக் கண்டர் கூறுவார். முருகனை ஈசன் கட்டித் தழுவினன்; ரமணர் ஈசனைக் கட்டித் தழுவினர்.

ஆனல் ஆச்சரியம்! அந்த அளவில் வத்ஸன் நாயகி ஆகிருன்.

மர்மங்கள் பலவற்றை ஒளித்து வைத்துக் கொண்டிருந்த இந்தப் பொல்லாத நல்லவரைப் பற்றி எனக்கு ஒரு சந்தேகம் - புத்ர பாவத் துக்கும் முந்தியே நாயிகா பாவம் வந்து விட்டதோ என்றுதான்! ''நான் என் தகப்ப னரைத் தேடிக்கொண்டு அவருடைய உத்தர வின்படி'' வீட்டை விட்டுப் புறப்படுவதாகப் புத்ரபாவத்தில் அவர் கடிதம் எழுதி வைத்து விட்டுக் கிளம்பியதாகப் படித்தோம். ஆனல் இக்கடிதத்தில் ''என் தகப்பனரைத் தேடிக் கொண்டு'' என்ற சொற்ருெடர் வரி பிளந்து பிந்சேர்க்கையாக (Caret–ஆக)ப் புகுத்தப் பட்டிருக்கிறது. ''நான் அவருடைய உத்தர வின்படி''. என்றுதான் முதலில் பால ரமணர் எழுதியிருக்கிருர். இந்த அவர் பிரயோகம் தமிழகப் பெண்மணிகளின் ஜீவநாடியாச்சே! அதிலே தமக்கே ஒரு நாணம் தோன்றித்தான் புத்ரபாவத்தை வலிந்து வலிந்து ஏற்கப் பார்த் திருப்பாரோ? ஆனல் அது இவரை விடுவதாக இல்லை! கடைசியில் வாலிப ரமணரே காரிகை யாகத்தான் ஆகிக் கவி பாடவேண்டி வந்தது- அன்று ஞானசம்பந்தர் முருகனவதாரமாக வந்து தேவியின் க்ஷீரத்தைப் பருகினலும், அல்லது அப்படிப் பருகியதாலேயே, தாம் நாயிகா பாவத்தில் ''வண்டரங்கப் புனற் கமலம்'' பாடினுற் போலே, ரமணர் நல்ல ஆண்மைக்குரிய காளைப் பிராயத்தில் காரிகை யாகி,

என்னை அழித்(து) இப்போ(து) என்னைக் கலவாவிடில்
இதுவோ ஆண்மை, அருணுசலா?[1]

என்று பாடினுர் ''அக்ஷர மண மாலை!''

அக்ஷமான (மைய அச்சு அல்லது axis ஆன) ஆத்மனில் நிலைத்தவர் புனைந்த பாமாலை 'அக்ஷ ரமண மாலை' யாக மட்டுமின்றி, நாயிகா பாவத்திலே, அழியாப் பொருளாம் அக்ஷரப் பிரம்மத்துக்குச் சூட்டிய ''அக்ஷ ரமண மாலை'' யாக அமைந்தது. அ, ஆ, இ, ஈ. என்று அக்ஷரங்களின் வரிசைக்கிரமத்தில் இப்பாடலின் அடிகள் செல்வதால் 'அக்ஷ ரமண மாலை' என்று பெயரிடப்பட்டாலும் 'அக்ஷரத்துக்கு இட்ட மண மாலை' என்ற பொருளும் நிச்சயமாக தொனிக் கிறது. அக்ஷரம் எனும் பால் கடந்த பர வெளியை மணுளனுக்கி மாலை சூட்டிய அத் புதத்தை என் சொல்ல? பரம அத்வைத பாஷ் யங்களைச் செய்தபின் சங்கர பகவத்பாதர்

1. சந்தச் சீரையும் சந்திக் கூட்டெழுத்துக்களையும் இலக்கண விதிப்படியே பின்பற்ற வேண்டுமென்பதில் வெகு கவனமாயிருந்தவர் ஸ்ரீ பகவான். மற்ற அனைத்திலும் பரம எளியரான அவர் இந்த அம்சத்தில் மட்டும் எளியரைச் சற்றே குழப்பும் புலமைக் கெடுபிடி காட்டியது ஒரு விசித்திரம். ஸாமானிய வாசகர்களுக்குப் புரியவேண்டுமென் பதற்காக-பகவானிடம் மன்னிப்புக்கோரி-அந்த விதியை வெகுவாக இளக்கியே நான் இங்கு பாக்களைக் கொடுக் கிறேன்.

த்வைத ஸௌந்தர்யத்தை ரஸித்து 'ஸௌந்தர்யலஹரி' பாடி, அதன் முடிவிலே அம்பிகையைப் பரப்பிரம்மத்தின் பட்ட மஹிஷி எனக் கூறி வாசா அத்வைதிகளை விலவிலக்க வைத்தாரெனில், நம் அத்வைத ரமணரோ ஆரம்பத்திலேயே அக்ஷரத்தைக் கலியாண மாப்பிள்ளையாக்கி விடுகிறார். அம்பிகை என்று பிறவாக ஒருத்தியைக் கொண்டுவராமல், தானே மணமகள் ஆகிவிடுகிறார், நம் பகவான்.

'பகவான்' என்பதில் ஒரு வேடிக்கை. ஆற்றல் மயனாக அகிலாண்டங்களை நடத்தி வைப்பவன் தான் பகவான், அவன் தொழிற்படாமல் 'தன்' மயமாக உள்ளுற இருந்தாலே பிரம்மம் என்பது. பிரம்மமாகவே ஆகிவிடுகின்றனர், செயலொழிந்த மஹான்கள். ஆனால் பகவானாக ஆகி அண்டாண்ட வியாபாரம் நடத்த எவராலும் ஆகாது. இதை ஆசார்ய சங்கரரே பாஷ்யத்தில் கூறுகிறார். ஆனால் தன் செயல் ஏதுமில்லை என்று ஆகிவிட்ட ரமணர் போன்றவர்கள் செய்ததனைத்தும் பகவான் செயலே என்பதால் அவர்களையும் 'பகவான்' என்றே அழைக்கிறோம். (நிர்குண) பிரம்மத்தைச் சொல்லாத வைஷ்ணவர்களும் ஒரு நிலையில் ஸ்ரீமந் நாராயணனோடு தாங்கள் பிறிதறக் கலக்கிற பாவத்தை எய்திவிடுவதுண்டு. அப்போது ஜீவனுக்கு நாராயணத்வமே உண்டாகி விடும், 'ஒன்று நீங்கலாக-என்பார்கள். அந்த ஒன்று என்ன? லக்ஷ்மீபதித்வம் தான் நாராயணன் ஒருவன் மட்டும்தானே திருமகள் நாயகனாக இருக்க முடியும்? அதனால் இப்படி.

இது இருக்கட்டும். 'ஸௌந்தர்ய லஹரி'யில் ஓரிடத்தில் ஆசார்யாள் பவானியை தாஸனாகப் பணிபவன் அவளது அருளால் ஸாக்ஷாத் பவானியாகி விடுகிறான்; விஷ்ணுப் பிரம்மாதிகளால் தொழப்படும் அகிலாண்ட வியாபார மஹாசக்தியாகி விடுகிறான் என்கிறார். அதாவது, பகவானாகாமல் பகவதி ஆகிறான். இப்படிச் சொன்னதால், ''லக்ஷ்மிபதித்வம் தவிர'' என்று மேலே சொன்னது போன்ற விலக்கு எதுவும் சொல்ல வேண்டியில்லை என்ற நுட்பமான உண்மையை ஸ்ரீகாஞ்சிப் பரமசாரியர் எடுத்துக் காட்டுவார். 'பரமேச்வர ஸதித்வம் தவிர' மீதமெல்லா விதத்திலும் அம்பாளாகிய விடுவதாகச்சொல்ல வேண்டியதில்லை அல்லவா? 'அவன் ஒருத்தனே ஏக புருஷன்; அவனது நாயகிகள்தாம் நாம் அனைவரும்; என்றுதானே மஹான்கள் யாவரும் அனுபவத்தில் கண்டிருக்கிறார்கள்? எனவே நேரே ஈச்வரனாக (அத்வைத ஞானமாக) ஆகாமல் முதலில் அம்பாளாக (த்வைத அன்பாக) ஆகலாம். அம்பாள் எப்படியும் ஈச்வரனோடு கலந்திருக்கிறவளாதலால், தன்னால் இதிலிருந்தே நாமும் ஈச்வரனாகி விடலாம். நாம் முதலில் லக்ஷ்மியாகி விட்டால், பிறகு 'லக்ஷ்மி பதித்வம் தவிர' என்று விலக்குக் கொடுக்காமலே, அவள் இரண்டறச் சேர்ந்திருக்கும் நாராயணனில் நாராயணனாகி விடலாம்! இப்படிக் காமகோடிப் பெரியவர்கள் கூறுவார்கள்.

நம் பகவான் ரமணர் இப்படித்தான் பகவதி ரமணியாகி அருணாசல ரமணரைக் கூடியவர்; அசலமாக ஆன நிலையிலேயே அன்புக் காவியமாக வாழ்ந்தவர், அல்லது வாழப்பட்டவர்.

பரம ஞானியர்க்கும் தவிர்க்க முடியா நிலை, விளக்க இயலாப் புனித பாவம் இந்தக் காந்தாஸக்தி. ஞானமணி மணிவாசகர் புத்திர பாவத்தில் ரமணர் போல் அன்பு செய்ய வந்தே, அது போதவில்லை என்று கண்டு, 'உன் கையில் பிள்ளை உனக்கே அடைக்கலம் என்(று) அங்(கு) அப்பழம் சொல் புதுக்க' மனம் கொள்ளாமல் ஈசனை ஆர அணைக்கும் நாயகியாகி விட வேண்டும் என்று இந்த அண்ணாமலையிலேயே ஆக்கிய 'திருவம்பாவை'யில் முடிக்கிறார். (இங்கே சிவனடியாரின் நாயகியாக வேண்டும் என்பதே வெளிப்பொருளாயினும் அந்த அடியாரை சிவ ஸ்வரூபமாகவே அவர் கருதுவது அதைவிட் வெளிப்படையாகும்.) எம்பாவையோடு இணைபிரியாது ஓதப் பெறும் 'திருப்பள்ளியெழுச்சி'யில், ''எவ்விதமான இடைக்குறைவும் இன்றி பரிபூர்ணமான மோக்ஷாநுபவம் நுகரும் ஞான பக்தர்கள்-ஸம்ஸார பந்தம் முற்றும் அறுத்தவர்கள்-

அவர்கள் பலரும் கருங்கண்ணியரான பெயர்களின் இயல்புக்கூடியே உன்னை வணங்குகிறார்கள்!'' என்று கூறி, நயம்பட ''அணங்கின் அம்பிகையின்) மணவாளா'' என்று ஈசனை விளிக்கிறார்.

பப்பற விட்டிருந்(து) உணரு நின்னடியார்
பந்தனை வந்தறுத்தாரவர் பலரும்
மைப்புறு கண்ணியர் மானுடத்(து) இயல்பின்
வணங்குகின்றார் அணங்கின் மணவாளா!

அம்பாளாக வேண்டும், நாயகியாக வேண்டும் என்பது ஏன்? ஜகத்து பொய்ம்மாயை, அதிலும் காமம் மஹா கொடியமாயை என்று தள்ளியே உலகும் உணர்வும் அடிபட்ட ஒன்றில் ஒன்ற வேண்டியிருந்தாலும், அந்த ஒன்றே இந்த ஜகத்தையும் தன் அலையாக இவனை ரஸிப்பிக்க வேண்டும் என்று நினைக்கிறதே, அதனால்தான்! லீலை என்னும்போது மாயை என்னும் கொடுமை போய்விடுகிறது. பரமஹம்ச குருமஹராஜ் அற்புதமாகச் சொன்னாரே, பாம்பு தன் வாயிலேயே விஷம் இருந்தாலும் அவ்விஷத்தால்தான் பாதிக்கப்படாதது போல் மாயையை ஆக்கிய பரமனை அது பாதியாது என்று. அவனையே அண்டிச் சார்ந்தோருக்கும் இது பொருந்துகிறது. அப்போது காமமே பவித்ர பவித்ரமான காந்தாஸக்தியாகிறது.

காந்தம் இரும்பு போற் கவர்ந்தென்னை விடாமற்
கலந்(து) எனோ(டு) இருப்பாய் அருணாசலா

என்று 'மணமாலை'யில் மலர் தொடுக்கத் தோன்றுகிறது.

அந்த உணர்வின் உண்மைத் தெளிவும் பிரகாசமும் அலாதியானவை. பரம அத்வைத ஞானியான தாம் பக்தி புரிவது மட்டுமின்றி அந்த பக்தியை மதுர பாவக் காதலாக அனுபவிப்பதைச் சற்றேனும் அவர்கள் மறைத்தார்களோ? இக்கால ஸைகோ அனலிஸிஸ் ''மேதாவி''கள் உள்படப் பலர் பலவிதமாக அர்த்தம் (அனர்த்தம்) செய்துகொள்ள இடமேற்படுமே என்று பாராமல் சுகர் ராஸ லீலையைத் தாமே கோபிகா பாவத்தில் பாடினார்; நம்மாழ்வார் அகத்துறையில் அகவினார்; மணிவாசகர் திருக்கோவை படைத்தார்; ராமலிங்க ஸ்வாமிகளுடன் தன் ஜாதகம் பொருந்துகிறதா என்று ஜோதிடரிடம் வினவிப் பாடினார்; ரமணரும் அக்ஷர மணமாலை யாத்தளித்தார். தாம் யாத்ததாக அன்றி, (மறை மொழி எனத், தானே அது முகிழ்த்ததாகச் சொன்னார்.

ஏன் பெண்ணாக வேண்டும்? ஸர்வ சரணாகத ஸ்தானம் பதிவிரதா தர்மமே என்பது ஒரு காரணம்; ஒளிவு மறைவே இன்றி உடலைப் போல் உயிரை அப்படியே பேருயிர் சூறை ஆடக் கொடுப்பது இன்னொரு காரணம்; காரணமேயில்லாத தூய பெருங்காதல் எல்லாவற்றையும்விடப் பெரிய ''காரணம்''. காரணம் என்று காட்ட வருகிறபோது அவற்றில் பெரியது அன்புமயமாகிவிட வேண்டும் என்பதே. அகிலாண்ட நாயகனின் நாயகியாகிவிட்டால் உட்பொங்கும் அகிலப் பிரேமைக்கே ஞான உள்ளம் விழைகிறது.

நின்னெரி எரித்தென்னை நீறாக்கிடுமுன்
நின்னருள் மழை பொழி அருணாசலா

என்று ரமணர் தமக்காக வரம் கேட்டுக் கொண்டதாகத் தோன்றும்போதே, ஞானாக்னியாகத்தாம் பிறர் அஞ்ஞானத்தை எரிக்கும் முன் அவர்களை அருளாளர்களாகக் குளிர்விக்கவும் வரம் கேட்டுப் பெற்றுக் கொண்டார் எனலாம்.

ஞானத்தில் தனி ஜீவத்தன்மை பஸ்பமாகும். முன்பு கருணையில் குளிவதை இங்கு அவர் சொன்னாலும் அவர் விஷயத்திலும் சரி, மற்ற பல அத்வைத அநுபூதிமான்கள் விஷயத்திலும் சரி, ஜீவமனம் எரிந்த முக்தர்களாக அவர்கள் ஆன பின்பே இறைவன் அவர்களிலே ஓர் அரியதில் அரிய அமுதமாம். அன்பு மனத்தைப் படைத்துக் குளிர் முழுக்காட்டியிருக்கிறான். மதுரையில் பற்றிய வெப்பம் அருணையில் குளிர்ந்தது என்பது இந்த அருள் மழைப் பொழிவுதான்.

அதன்பின், அருணை ஜோதி முருகனைப் பச்சை மயில் சுற்றிச் சூழ்ந்திருப்பது போலவே அருணாசல ஞானாக்னியான நம் பகவானை மரகத மீனாட்சியின் அன்புப் பசுமை என்றும் கவ்விப் படர்ந்திருந்தது. ஒன்று போய் இன்னொன்று என்றில்லாமல் ஞானமும் பிரமையும் ஒன்றுக்கொன்று அழகூட்டிக்கொண்டு ஒரு சேரப் பொலிந்தன. இப்படிச் சொல்வது கூட சரிதானா? ஞானமும் பூர்ண அழகு, பிரமையும் பூரண அழகு. அதனாலேயே இரண்டும் ஒன்று தான் என்றாகி விடவில்லையா? யோசித்துப் பாருங்கள், இல்லாவிடில் அந்த அழகு அபூர்ண மாகத்தானே ஆகிவிடும்? ஆக எழில் என்ற ஒரே தத்வத்துக்கு அழகு, ஸீந்தாம் என்ற இரு பதங்களிருப்பது போல ஞானம், பிரேமை என்ற இரண்டும் நிறைந்த நிறைவு என்ற ஒன்றையே சொல்லும் இரண்டு வார்த்தைகள்தாம். வார்த்தைகள் வேறு; உட்பொருள் ஒன்றே. பூர்ணத்வம் என்ற மோக்ஷானந்தமும் அது.

அழகு சுந்தரம் போல் அகமும் நீயும் உற்(று)
அபின்னமா யிருப்போம் அருணாசல.

எனும்போது பிரேம தத்வ அம்பிகையான தாமும் ஞான அருணாசலமும் ஒன்றுவது, ஒன்றாகவே உள்ள அழகையும் சுந்தரத்தையும் புதிதாக ஒன்றமைப்பது போலத்தான் என்று நகைச்சுவையோடு உட்குறிப்புக் காட்டுகிறார் போலும்! (பகவானின் தாய் தந்தையர் பெயர் அழகம்மாள், சுந்தரமய்யர் என்பது. பரம வைராகி காதல் பாட்டுப் பாடும்போது, முற்றத் துறந்து வந்த வீட்டினரையும் உறவு கொண்டாடத் தோன்றியதோ?)

சுகக் கடல் பொங்க, சொல்லுணர்(வு) அடங்க
சும்மா பொருந்திய

ஞானநிலை கலையாமலும் குலையாமலுமேதான், நீரிலே பனிக்கட்டி கரையுமாப் போலே பிரேம தத்வ பகவானில் நாமும் பிரேமையாகக் கரைய வேண்டுகிறார்;

அம்புவில் ஆலிபோல் அன்புருவினில் எனை
அன்பாக் கரைந்தருள் அருணாசலா!

ஞான ரமணர் பக்த ரமணருக்குத் தான் எனும்போது அவர் பகவானிடம் செலுத்திய பிரமையையே நினைக்கிறோம்.

வாஸ்தவத்தில் இது அனவரதமும் அவர் அனைத்துயிரிடம் பொழிந்த பிரம வர்ஹமும் ஆயிற்று.

ஈசனின் நாயகியானதால் அவர் ஸர்வ ஜீவ குலத்துக்கும் தாயாகிறார்.

பரமஹம்சர், ஸ்ரீ பெரியவர்கள், போன்றோரிடம் தெற்றெனத் தெரியும் பெண்மைத் தாய்மை பகவான் ரமணரிடம் எடுத்த எடுப்பிலே தெரியாமல் ஞானத்தின் பௌருஷமே அவரது கருணையிலும் மேவி யிருப்பதாகத் தோன்றலாம். ஆனால் நெருங்கி னோமாயின் அவரது அணுக்கத் தொண்டர் பலரைப் போல நாமும் அவரைத் தாயாகவே காண்போம்.

அத்வைதத்தில் த்வைதம் என்ற அருமை அனுபவம்தானே ஞானி ரமணரிடம் நாம் கண்டு வரும் பக்தி? இதற்கேற்ப அவரைத் தாயாகவே நாம் கண்டாலும், அவரோ தாயிடம் தாம் சேயாகப் பிரிந்தே ஒட்டிக் கொண்டிருந்தார். இங்கே மீண்டும் பகவத்பாத சங்கரரை நினைவூட்டுகிறார். அடுத்த இதழில் சற்று விளக்கமாகக் காண்போம்.

---

குலப் பெண்களைக் காப்பாற்றுவதைப் போல, வேதத்தை நாம் அவசியம் காப்பாற்ற வேண்டும்.
—ஆத்ம புராணம்

எனக்கு விக்ஷேபமின்மையால் சமாதியும் இல்லை. விக்ஷேபமும் சமாதியும் விகாரத்தை யடையும் மனதினுடையவை.
—பஞ்சதசி 14:52

